உ

சிவமயம்.

ஸ்ரீமத்கூவலப்புரம்.

# அன்னதானமகத்துவபுராணம்.

இஃது

பால்வனம் - வித்வான்

## பெரியசுப்பாரெட்டியார்

இயற்றியது.

விருதுபட்டி

பொன்னம்பலதேசிகரவர்கள் மாணாக்கர்

ஸ்ரீமத். இராமலிங்கசுவாமிகளால்

சென்னை-இட்டா

பார்த்தசாரதிநாயுடு

அவர்களது

ஸ்ரீபத்மநாபவிலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1900.

நெ. 1 திருப்பள்ளிசந்து பெத்துநாய்க்கன் பேட்டை.

இதன்விலை ரூபா - 1.

கடவுள் துணை.

# சிறப்புப்பாயிரம்.

---

திரிசிரபுரம் வித்துவானும்

S. I. R. ஸ்டேஷன் மாஸ்டருமாகிய தி. ராஜ.

காந்தபெருமாள்பிள்ளை யவர்கள் இயற்றியது.

தனையேநிகர் திருக்கூவல புரமேவிய சதுரன்
றாள்பங்கயம பணியுந்சிவ தருமக்குண முடையான்
அனையேயெனப் பலவன்பர்க ளடியின்முடி சூட்ட
வருட்டங்கிய குருசுந்தர மூர்த்திதிருப பெயராற்
கனைபாற்கட லமுதோவென வுண்டோருளங் களிக்கக்
கட்டித்தயிர் பால்நெய்நறுங் கனிவர்க்கமுங் கலந்து
தினமேமொழி அனதானத்தின் செயல்தங்கிய கதையைச்
செய்தான்றர புரைக்கவெவர் திறமோபுல வீரே. (க)

(வேறு.)

கம்பரொட்டக் கூத்தர்புகழேந்தி யவ்வை
காரிதண்டி படிக்காசு காளமேகம்
உம்பர்புகழ் புலவர்சிகா மணிகளெல்லா
மொழிந்தனரென் றயர்ந்துமன மொடுங்குங்காலை
யெம்பெருமான் றிருவருளோ குமாரசாமி
யியற்றியநற் றவப்பயனோ விருநீர் சூழ்ந்த
அம்புவியோர் தமிழருமை யறியவென்றே
அவதரித்த கலைமகட்கோ ரரங்குதானே. (உ)

என்னபல கலைப்புலவ ரிறும்பூ தெய்த
வியலிசைநா டகத்தமிழ்க்கோ ரிறைவ னாகித்
தன்னிகரில் லாததவ மகிமை பூண்ட
சட்டிமுனி கட்டளையைத் தலைமேற் கொண்டு
மன்னவருஞ் சபாசெனவே யன்னதான
மகத்துவநற் புராணமதை வகுத்திட் டானற்
சொன்னமொழி தவறாத கீர்த்தி வாய்ந்த
சுப்பய்யக் கவிராஜ சுகுணன் மாதோ. (ங)

பிரமகபாலம்

திருவருளானந்த வள்ளலாரவர்கள் மாணுக்கர்

திருநாகை வெளிப்பாளையம்

மயில்சுந்தரசுவாமிகளியற்றியது.

மதியைவென்றவர்பானண்ணி மயக்குறுமதியைநாளு
மதிகமாயுற்றசீர்சா லரியசுந்தரரொண்டேனைக்
கதிபடைசெவிவாயுண்ணக் கருத்தெனும்வளையாலள்ளிச்
சுதைநிகர்கவியாற்பெய்தான் சுப்பையகவிஞன்மன்னே.

இராமநாதபுரம் சமஸ்தானத்தைச்சேர்ந்த

தாமோதரபுரம் மகாவித்துவான் - ம-ா-ா-ஸ்ரீ

சுப்பிரமணியபிள்ளையவர்க ளியற்றியது.

---

சொல்லைக்கன்னலைத்தருமாச் சூழ்கூவர்சுந்தரமூர்த்தியினற்றாய, வெல்லைச்சீருரையென்ன விளையிற்குணச்சட்டிமுனியிசைப்பத்தொன்னூல், வில்லைக்கொண்டன்ளிருளை விலக்கறிஞன் பால்வனமே விரும்பி வாழ்வோன், குல்லைத்தொங் கலின்மவுலி யனையான்சுப் பயக்கவிஞன் கூறினனே. (க)

இதுவுமது - வேறு.

எண்ணர்க்கா மெழுத்தர்க்கா மறைவலோர்க்கா மிருமூன்று சாத்திரர்க்கா மிசைநூலோர்க்காங், கண்ணார்க்காம் விரிஞ்சர்க்கா மூக்கண்ணர்க்காங் கணபதிக்காங் கந்தர்க்காங் கலைவலோர்க்கா, மண்ணிற்பால் வனத்துறைசுப் பயவேள்கூவன் மாநகரின்மேவியசுந் தரரின் வாய்மை, பண்ணிற்கொண் டனநான மகத்துவத்தைப் பாலித்தநூறனையே பகரிஞ்மாதோ. (உ)

குழந்தாபுரிக்கிராமக்கணிகரும்

மகா வித்துவானுமாகிய ம-ா-ா-ஸ்ரீ,

திருஞானசண்முகம்பிள்ளையவர்களியற்றியது.

———:*:———

பானமகத்துவட்பண்ணும் படியமுதிற்சுப்பையப்பண் பாவலோன்மே
லானமகத்துவகைதரு மரும்பயனின்மிக்கென்னு மடைவாலன்ன
தானமகத்துவமுயர்சுந் தரமூர்த்திசரிதை நயுறத் தமிழ்யாப்பான்மெய்ஞ்
ஞானமகத்துவமையுற நண்ணுசட்டிமுனியருள நன்கீந்தானால்.

குட்டிலொட்டி

ம-ா-ா-ஸ்ரீ, மதுரகவிதாசு

அழகிரிசாமிரெட்டியாரவர்களியற்றியது.

———*———

கடலமுதனைய வினியவோதனமிக் காசினியாவையுமருந்தப், பட
ங்குயர்தருங் கூவலைப்புரப்பெருஞ்சீர்பாடினன்புலமையோர்மகிழக், குட
ங்கவிழ்மதுவாமெனத்துளிமலர்த்தேன் குடைந்தளியுணத்தருசோலை,
தடந்திகழ்கோவிற்பிரங்குபால் வனம்வாழ்தருவெனுஞ்சுப்பயமதனே.

விருதுபட்டி ம-ா-ா-ஸ்ரீ, டி. யன்.

கந்தசாமிபிள்ளையவர்களியற்றியது.

———:*:———

நன்னலஞ்சேர் கூவனகர்ச்சுந்தரேசர் நல்லருளானிகழுமன தான
மேன்மை, தன்னைமதிநதியணிவோனருளினற்செந்தமிழிலனதானமக
த்துவநூலசொற்றான், மன்னவர்கள்புகழ்தென்பால்வனத்திலென்றும்
வாழ்வுறுசுப்பையாவலவனிப்புச், சொன்னவமாகியவமிர்தமுண்போர்
நாளுந் துகளில்செல்வம்பெற்றீற்றிற்சுவர்க்கந்துய்ப்பார்.

———◆———

விருதுபட்டி ம-௱-௱-ஸ்ரீ
பொன்னம்பலதேசிகரவர்கள் மாணாக்கர்
ஸ்ரீமத். இராமலிங்க சுவாமிக ளியற்றியது.

தேமணக்குஞ் செழுங்கமலத் திருவளர்திண் புயத்தேவுஞ் சிரநான்கோனுங், காமணக்குங் கடவுணகர்க் காவல்செயா யிரங்கணனுங் காணற்கெட்டாப், பூமணக்கும் பொற்பதத்தைப் பூசைபுரிசுந்தரர்பொற்புடனவாழ்வுற்றப், பாமணக்கும் புலவர்பதி கூவன்மான் மியத்தையருந் தமிழ்ப்பாவாமே. (க)

செப்பமென ஞானமுயர் சட்டிமுனி யிசைப்பவெற்குச்சிறந்தநன்னூ, றப்பறவேயோதுவித்தோன் றமிழெனுநற் சலதிகரைகண்டவங்க மெய்ப்புவியு மதிக்குமுயர் பாலுவனைப்பதிமேய வெங்கோன் செல்வச், சுப்பையநற் கவிஞனின்னதானமகந் துயமென்னச் சொன்னநூலே. (உ)

அரசருக்கு மனுநூலா மணிமாவா தியசித்தர்க் கான நூலாம்
பரகிலேதேர் ஞானியருக் குபநிடத வேதாந்தப் பண்பார் நூலாந்
தெருளுளசோ திடாதமக்குக் கணிதமதாம பூசுரர்க்குச் சிறந்தவேதங்
கருணிகருக்கெண்ணுகுங் கவிஞர்களுக்கிலக்கணமாங் கருதுங்காலே.()

வாசுதேவநல்லூர் மகாவித்துவான் ம-௱-௱-ஸ்ரீ
பழனியாண்டிப்புலவ ரவர்களியற்றியது.

அன்னத்துவசன்விதிந்தவுயிர்க் கன்னத்துவசாட்டியனங்
கன்னற்பாகுகனிதேன்பால் கலந்துகனிதெக்காலுமருள்
செங்நெற்பழனவளஞ்சேருந் தெய்வத்திருக்கூவலப்புரஞ்சீர்
மன்னத்தருமபுராணமெனவரைந்தான்மகிழ்சுப்பையவேளே.

பால்வனம் ஸ்கூல் மாஸ்டர் ம-௱-௱-ஸ்ரீ
வாழவந்தபிள்ளை யவர்களியற்றியது.

செல்லினங்கள் பொழிலணவ மயில்களாடுஞ் செங்நெல் கன்னல்கதலி பலவேலிசூழுஞ், சொல்வரிய கூவன்மா நகரின்மேவுஞ் சுந்தரமூர்த்தியினன்மட பதியினுளு, நல்லவன தானநிகழ் மகிமைதன்னை நன்குணர்வோர் செவிக்கமுது நல்கன்மானத், தொல்லுல கெலாம்புகழ் புராணமாகச் சுப்பையவேள செந்தமிழாற் சொற்றுன்மாதோ.

சிறப்புப்பாயிர
முற்றிற்று.

சிவமயம்.

# பிழைதிருத்தம்.

| பக் | கவி | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| 10 | 13 | 2 | பனை | பணை |
| 33 | 51 | 4 | பொருவானவ | பொருளானவை |
| 36 | 18 | 4 | ப.றேழியர் | டஃறேழியர் |
| 3[illegible] | 19 | 3 | மெற்றார் | பெற்றார் |
| 38 | 27 | 2 | கொணடவழேனு | கொண்டவரெனினு |
| 38 | 27 | 3 | வரர்போ | வழிநர்போ |
| 38 | 27 | 4 | இருப் திலென்ன | இருப்பசிதென்ன |
| 38 | 30 | 4 | பகர்வதிலென்ன | பகர்வசிதென்ன |
| 39 | 40 | 4 | தாற்பவன் | தார்பவன் |
| 41 | 50 | 3 | வாமெஞன்று | வாமெருன்று |
| 41 | 51 | 1 | களைமாற்றி | கலைமாற்றி |
| 41 | 56 | 2 | முனிவறபோ | முனிவர்ப்போ |
| 49 | 13 | 3 | னியறுறும் | னியற்றும் |
| 52 | 40 | 3 | முயர் நிலை | முயர்விலை |
| 53 | 44 | 1 | அள்ப்பரு | அளப்பரு |
| 54 | 57 | 4 | ணந்தனவிலு | ணந்தர்நவிலு |
| 55 | 1 | 3 | தருமமிரத | தருமமிர்த |
| 58 | 26 | 4 | கலாயினையே | கலாணுயே |
| 64 | 12 | 3 | சார்வர் | செய்வோர் |
| 67 | 34 | 4 | பறிநிடாப் | பறிந்திடப் |
| 69 | 11 | 4 | மிரண்மிட்கல் | மிருண்முட்கல் |
| 69 | 13 | 1 | பாசத்துள்ள | பாசத்துள்ளே |
| 71 | 29 | 3 | றண்ணு நயிர் | றன்னுருயிர் |
| 76 | 33 | 3 | னிருபரையுங் | னிருமரபையுங் |
| 77 | 37 | 3 | நவஞ்செறி | நலஞ்செறி |
| 80 | 67 | 2 | புரித்தான் | புரிந்தான் |
| 89 | 61 | 2 | விசும்பில் | விளம்பில் |
| 91 | 72 | 4 | சுவசுந்த | சுவசந்த |
| 92 | 79 | 3 | சீதன | சீதள |
| 95 | 21 | 3 | குனனு | குணனு |
| 96 | 24 | 4 | கோவத் | கோலைத் |
| 9[illegible] | 30 | 2 | பம்பு | நம்பு |
| 96 | 31 | 2 | துரிழைப்பது | துயரிழைப்பது |
| 97 | | | பிறனிநயவாமை | பிறனினயவாமை |
| 97 | 34 | 1 | பின்னருலோப | பின்னருமுலோபு. |
| 97 | 34 | 1 | பெற்றிராற் | பெற்றியாற்[illegible] |
| 97 | 38 | 4 | மண்ணுவரே | மன்னு[illegible] |

# பிழை திருத்தம்.

| பக் | கவி | வரி | பிழை. | திருத்தம. |
|---|---|---|---|---|
| 98 | 41 | 3 | எளளணவெனு | எள்ளளவெனு |
| 98 | 1 | 4 | மகிழ்சகி | மகிழ்ச்சி |
| 100 | 12 | 1 | கிளையஞ | கிளைஞ |
| 100 | 13 | 2 | வாறு | வாறு |
| 100 | 14 | 1 | னிசைத்தாடி | னிசைத்தபடி |
| 100 | 14 | 2 | காண் | கான் |
| 100 | 16 | 2 | செங்கமலர் | செங்கமலமலர் |
| 101 | 18 | 1 | மவளை | மவனை |
| 101 | 18 | 3 | மரமை | மரபை |
| 102 | 28 | 2 | விளங்கு | விலங்கு |
| 103 | 36 | 4 | னன்னிய | னன்னைய |
| 103 | 37 | 2 | ஞளே | ஞலே |
| 103 | 40 | 3 | ரிறவலர் | ரிரவலர் |
| 105 | 50 | 3 | று,தஞுசி | றுதஞுசி |
| 106 | 58 | 2 | முகமுனி | மிகமுனி |
| 111 | 34 | 4 | சூன | சூழ் |
| 112 | 47 | 3 | னடைவி | ளடைவி |
| 113 | 2 | 1 | கழந்த | கழைந்க |
| 113 | 7 | 1 | மவைத்த | மமைத்த |
| 114 | 8 | 2 | வெண் | வென் |
| 116 | 29 | 1 | ஞேதன | ஞேதன |
| 122 | 25 | 1 | மென்றி | மின்றி |
| 126 | 11 | 1 | நீறள்னி | நீறள்ளி |
| 127 | 14 | 3 | கன்னிடர் | கன்னடர் |
| 130 | 35 | 1 | கண்டு | கணடு |
| 130 | 42 | 1 | பங்கரி | பாங்கரி |
| 130 | 42 | 2 | றீரங்கறவ | றீங்ககறவ |
| 132 | 2 | 2 | கூர்தன | கூர்ந்தன |
| 132 | 6 | 3 | மின்னிய | மன்னிய |
| 132 | 7 | 1 | நல்லோகம் | நல்யோகம் |
| 136 | 3 | 3 | விளைவிற் | விளைவினிற் |
| 137 | 44 | 4 | கின்மால் | கின்பால் |
| 139 | 4 | 3 | தோரு | தொறு |
| 139 | 11 | 3 | வாரறி | வாற்றி |

பிழை திருத்தம்,

முற்றிற்று.



உ

கணபதி துணை.

ஸ்ரீமத் கூவலப்புரம்

# அன்னதானமகத்துவபுராணம்.



## பாயிரம்.

### விநாயகர் வணக்கம்.

சொல்லாருஞ்சீர்படைத்த சுந்தரன்பாகவதத் துவசநாட்டி
யெல்லாருமினிதுறவின்னமு ரிந் தெண்ணெனகமுமியற்று நூறோர்
வல்லாரும்புகழ்சரிதந் தனைமறிப்வி சிசைப்பரிதுமனமாசற்ற
நல்லாரும்பரும் வணிவிநாயகனை மொற்பதமலர்நந் தலைமேற்கொள்வாம்.

### பரமேசுரன்றுதி

அஞ்சக்கரத்தாற் சலந்தரனை யமரிற்செகுப் பாணரியகத்தி
லஞ்சக்கரத்தாற்றுதிப்பவுவந் தருளிபமரா புரிவரர்கண்
டஞ்சக்கரந் தாமதிரட்டி யருந்தியமீ மீந் தகலவா
னஞ்சக்கரத்தமலபுரக்கு மரன்பொற் றணந் தலைக்கணிவாம்.

### அம்பிகை துதி.

தனபதியைமதியாது தக்கன்வேள்வி
 தானியற்றவவன்மகளாந் தன்மையோவிப்
பின்பதிகதவடபுரியு நாகவேந்தன
 பெருங்களிப்புமேவவவன் மகளாயத்தோன்றி
மனபனந்கடமைந்தோங்க வருமான்மேனாள்
 வாரிவிடமுண்ட கண்ட மகிழ்நனானோ
டன்பதிகமாகவென்றுங் கலந்துவாழு
 மம்பிகைபொற்பாதமலரகத்துட்கொள்வாம்.

### கணபதி துதி.

பொன்னுகத்துடையவனயன் புகழநாக நதிறைநாகர் போற்றநாக
மின்னுகத்திடனுகமிளிர்நாகம் பூணுகவிராக் கும்மேவணி
தன்னுகத்திளம்பிறையு நதியுமணியரன்மகிழுந்தனயனுகி
முன்னுகமுகனுகநிலனுகவென்றருண் முன்னவன்றாள்போற்றி.

## குமரவேள் துதி.

பொன்றானையுடையானை வாமனாந்தீர்த்தாண்டானைப்புகழுளானை
யன்றானைமுகத்தானையடர்த்தானை முன்னுகவன்புற்றானை
வன்றானையசுரர்தமைமாயத்தானை யமரர்பணிவானைவஞ்சத்
தொன்றானையிருமூன்றானனத்தானை யிருதயத்திலுன்னிவாழ்வாம்.

## திருமால்துதி.

அன்றாழியருளியொற்றால் விரவலர்த முறையுளறிந்தரிகளோடுஞ்
சென்றாழிகடந்தரக்கர் செருவில்வயாபுனைந்தாயர் சேரிமேவிப்
பின்றாழியுமொருவன பெறவீடு தந்துமறை பிறழ்ந்தோர் தம்மை
வென்றாழி சரத்திருக்கும் விண்டுதிருப்பதமலரை விரும்பியுய்வாம்.

## சரசுபதி துதி

உலகில்வாழுயிர்கள்யாவு முதவியகமலனாவி
னிலகினான்மறைகளாதி யியம்புறுபொருளகட்கெல்லாந்
தலைமைபெற்றுயர்ந்துமின்னுஞ் சகலர்க்குமுணர்வுநல்குங்
கலைமகள் சரணகமலங் கருத்தினிலிருத்தி வாழ்வாம.

## நந்திதேவர் துதி.

விந்தைசேர்புயன் வேதமந்திரமாகத்
துந்துமேவுந்திரந் தாங்கியொண வாய்நவி
னெந்தையாப்பர மனின்புறவகிய
நந்திபொன்மலர்த் தாடினாடுவாம.

## தமிழாசிரியர் துதி.

அலைகொள்வாரியை யங்கையிற்கொணடுநன்
னிலைகொளுந்தமி ணிலவிடதோதியே
மலையமால்வரை வைகுங்குறுமுனி
யிலகுபாதங்க ளேத்தியுய்வாயரோ.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் துதி.

பொய்யமையான வமணெறிபோக்கிமேற்
சைவநன்னெறி யெனறுநந்தழைக்கவே
துய்யமன்மனை சிந்தைத்துயரறச்
செய்யுமண்ணல் திருவடியேத்துவாம்.

எங்கணுநிறைந்த சிவப்பிரகாச தேசிகரிணையடிமலரைச்
சிங்கலிலுளத்திற் சேர்த்தியெய்ச்சாந்தலிங்க தேசிகன்மலர்ப்பதத்தைப்
பொங்கியவுவகை யாற்றினந்தோறும் போற்றியன்னவரருளுளத்திற்
றங்கியபழனிமுனியெனவொருபேர் சார்ந்தநற்குமர தேவரையே.

வேறு

இனியவேதசிகராய்ச்செய்யபா விருதயந்திருத்தியாண்டும்
தனைநிகரில்லாச்சிற்றதிச் சிதம்பரசாமிதன்னை
வினையகலுளத்திற்கொண்டு விளங்குஞ்சண்முகர்பொற்றாளைப்
புனைசெனியுடையோராரறுமுக புந்தியானெழுகான்மிக்கோர்.

வேறு.

எழுத்தொடுசொற் பொருள்யாப்பினணியுமென்று விலங்குபஞ்ச விலக்கணங்களிற்றேர்ந்து, விழுத்தருமத்தாந்தமுறைநூல்கடேர்ந்துவேதாந்தசுருதிகளுமவாவகதிரானம, பழுத்தசிவப்பிரகாச நாதரென்னும் பகாகந்தசாமிபதுமாகர்மோற்றிச, செழித்தபுகழ்படைத்தசட்டிச்சாமியென்னுசெட்டபுமந்நசசாமியருட்சிறைதைகூர்ந்தே.

கார்தவழுஞ்சதுரவரையீசன்பாதங் கருத்துறுஞ்சுந்தரமூர்த்திகருணையாலே, நாந்தகழும்வேதநாதப்பொழுதேத்தவன்ன தானமொடெண்ணுண்கறமுந்தவத்தோர்வாழ்தல், வேறிகழுவெஞ்ஞான்றுநிகழ்வதான விப்பெருமை தனைமுனமோரிசநூற்கேயப், பார்புகழுமனதானப்புராணமென்னுப் பகருமெனமயிர்விமிந்நூல்பகாந்தநூமால்.

வேறு.

இழிவுடைசமசொற்கமரா வியான்சொலபுனகவிகளேனும
வழுவிலக்கணத்துக்கென்று யாரந்நூலோர்கூறுர்
பழுதறுசொற்கடேரதோர் பாலகர்பிதற்றுகின்ற
மொழியையுமகிழ்ந்துகேட்டு முகமலரொளிருமாறே.

போலியென்றுணர்ந்துமப் போலியைப்புலவரெல்லா
நாலினுமபுகலுமாறே நுவலிலக்கணங்கடேர்ந்தோர்
சால்புறும்பதியையேனுஞ் சார்ந்திலாப்பேதையேன்சொன்
மேலவர்கொள்வரென்று விருப்புடனுரைத்ததாமால்.

கோகிலங்கூவக்கண்டுகுளறியகோட்டான்போலுந்
தோகைமாமயில்களாடசுழலும்வான்கோழிபோலும்
வேகமார்கலுழன்கண்டுவிசைத்தெழூமறுகாற்போன்றும்
நாகமார்முன்னூன்மானப்பகரயான்புகுந்தவாறே.

நல்லவர்நெறியினாற்றும்பூசனைநயந்துமில்லான்
கல்லினாலெறியச்சிந்தைகளித்தருளீசன்மான
வல்லவரிசைகுன்றாமல்வழுத்துநாலொப்பநாயேன்
சொல்லியநூலுட்கொள்ளறூயவர்வழக்கந்தாமே.

வானவர்முனிவர்க்கான்றவரந்தருமீசனன்பார்
மோனசுந்தரரென்றோதுமுத்திதன்சித்திசேர்ந்த
மேனலமானவிந்நூல்விளம்புவோர்விரும்பிக்கேட்போர்
தானமவாதையின்றிச்சம்புதாட்கணியராவாரோ.

இம்மையிலங்கணிடுமிருநிலத்துயர்தவரும்
செம்மைசேர்புதல்வர்மற்றுஞ்சிந்தைகூர்பொருள்கள்யாவுங்
கொம்மைவெம்முலையாள்பாகனருள்கொளுமடியரன்பும்
பொம்மெனவடைந்துநாளும்புகழுடன்வாழ்வாமன்றே.

ஆணவமுதலாய்ச்சொன்னமூவரண்கடந்தவர்க்காய்ந்து
காணுதற்கரியசோதிக்காலமாமலரிணைமீது
தாணுநன்னடனஞ்செய்யுந்தன்மையுமுணர்ந்துபாரில்
வேணசித்திகளுந்தேடுநாயினைவணங்கிவாழ்வர்.

பாயிரமுற்றிற்று.

---*---

## சிறப்புப்பாயிரம்

சொல்லரியகூவமாநகரிலென்றுந்துலங்கியசுந்தரமூர்த்திகருணையாலே, பல்லுயிர்க்குமன்னதானமாரிவினைற்றுமன்பினைந்தெனபாலுவணப்பதியினாளுங், கல்வியறிவொழுக்கமுயர்புகழ்பெற்றோங்குங்கவின்கொளருணாசலதேசிகன்றாங்கற்ற, வல்லமதாரிற்நாவலன்சுப்பையவேளிந்தமாநிலத்திற்புராணமதாய்வகுத்ததாமால்.

முற்றிற்று.

---



உ

சிவமயம்.

# ஆற்றுப்படலம்.



நல்லறங்களு மொழுக்கமு நாளுமேலோங்கிச்
செல்வமேதிகழ் திருப்புகழ்ப்பாண்டிநன்னாட்டில்
வல்லவையையும் பொருனையென்றிருநதிவளப்பிற்
பல்வளங்களுஞ் செறிதரப்பரிப்பதுபகர்வாம். ௧

அண்ணலாரடி யார்திருநீற்றினையணிந்த
வண்ணமேனியை யானநலான்வழிபடர்ந்த
வெண்ணிறத்தன முகில்களாழ்விரிகடல்பருகிக்
கண்ணன்மேனியைக் கருப்பமீண்டகன்வெளிகரந்தே. ௨

பொன்னிறத்துளான பொன்னிறந்தண்ணலைக்காண
மன்னிநேர்வரு செயலெனமாலெங்கநாகர்
துன்னுறுஞ்சதுராசலமீதினெழும்புயையான்
மின்னிறக்கவி னேறுவான்வெளியிடைசூழ்ந்தே. ௩

கானற்றேரொடுங் கடுங்கதிர்க் கதிர்களோ படையாய்
வேனிற் றனிருந்தரசெய விசயத்தினை யுணர்ந்து
வானற் றனையாம் படைகளாற் கோடையை மாய்க்கத்
தானுற் றுமெனா முழக்கொடி டடித்துமின் னியதே. ௪

கனக மால்வரை வில்லியைக் காமன்முன் னுவந்து
புனித மஞ்சன மாட்டிய செயலினைப் பொருவ
நனி தவத்தர்கண் முதலநாளிலந்தவர்க்கெல்லாந்
துனி யறச்சது ராசல மேன்மழை சொரிந்த. ௫

மானி றுத்திய கரத்தினன் மேவுமால் வரைகீழ்ப்
பானி றுத்திய குறிஞ்சிக் கப்பான்மை யிற்பரவ
மேனி றுத்திய வண்டத்தின் முகடுற வெளித்தூண்
டானி றுத்திய தாமெனும்படி மழைத் தாரை. ௬

பெய்த வான்சதுர்ப் பிறங்கலி னுடம்பெலாங் குளிரச்
செய்து கோடையைச் சினந்தெங்குந் தொடர்வது கடுப்ப
வைய மெங்கணுஞ் சிறப்புற வான்றினம் பொழிய
வெய்ய வேனிலின் பருவமும் வெறித்து நீங்கியதே. ௭

போத மேவிடப் புல்லிய மலப்பகை தவிர்ந்தும்
வாதனை தமைத் தாக்குமா றுயர்மறை கரந்துங்
கோதின் மாமிரு கங்களும் பறவையின் குழாமு
மேதரும்படி மரமபல நண்டுமெரி துவற்றும். அ

## வேறு.

உள்ளன பொருள்கள் யாவு முலந்திர வலர்கட் கெல்லாம்
வள்ளலாங் கொருவ னீந்து மற்றுங்கைப் பொருளி லாமல்
விள்ளரு ஞானந் தாமே மெய்யுற வெறிறுமா போற்
கள்ளமின் மாரி பெய்த கார்க்குலம் வெளிறிற் றனறே. ௯

வழுவிறென்பால்வனத்து வானவன் றருமேற்றேனு
பொழிதருபாலினவெள்ளம பொன்னிறத்திழியுமாபோற்
குழுவியமுகில்கண்மெய்யபக குன்றருசதுரகமுன்றைத்
தழுவிவெள்ளருவியெந்து வரமிசைவழிந்தமாதோ ௰

அந்தநல்வரையின்மேனின் றிழிந்துவீழருவியாவுஞ்
சுந்தரப்பொருளைநல்லவையேனுஞ்சருமெ நாவலான்ற
முந்துறமுந்தும்பொருளை முறிதிறைகரத்தால்வீசி
வந்தனமற்றுமுள்ள வான்பொருளவ்வையிமாதோ. கக

வேனிலைமடியத்தாக்கி வெற்றிசேர்வாகைசூடி
மேனிலையுணர்ந்தவீர ரிருவரையிருமடங்கூடி
மீனுயர்துவசனுட்டை வி[illegible]புரகுமாறு
தேனுயர்தெரியல்வீர [illegible]பொருவருவதே [illegible]. கஉ

மின்னியமணிபொன்முத்து வேயகிற்சந்தனத்து
மன்னியவாசநாவி மயிற்பீலிவாகைதூரி
யின்னனபொருள்கள்யாவு மெடுத்துக்கொண்டேகுநீராற்
பண்ணரும்வணிகமாக்க ளாணமைமயக்கநீத்தம. கங

கல்லொடுமரங்கடாக்கக் கல்லெனவொலித்துப்பொங்கிப்
புல்லியவேகத்தோடு புணரிமேற்போகுமாற்றல்
வல்லசெஞ்சிலையிராமன் மகிழ்வினிற்சேதுசெய்ய
செல்லுறுஞ்சேனைவெள்ள மாமெனச்சென்றவெள்ளம். கச

தணிவருமதமாமற்றுஞ் சாதருமாக்கள்யாவு
மணிவருஞ்சேனையாக வானரசேலினங்கடானே
மணிவரும்படைகளாக வழங்கொலிமுரசமாகப்
புணரிமேற்பொருவானுன்னிப் போதரும்படைநேர்போன்ற. கரு

இனையவாகிய விருந்தியயந்திரு லெங்கணுஞ்சிறப்பெய்த
மனையறங்களு மற்றுளவறங்களு மறைநெறிகுன்றாதாய்
வினையகன்றிடக் கயற்கணியுடனருள் விமலனைசெங்கோலோச்சுந்
தனைநிகர்த்திடாப் பாண்டிநன்னாட்டணி சாற்றுதற்கெளிதாமோ. ௧

முன்னைநாண்மழை வறத்தலிற்பசிப்பிணி மூண்டிடாவகைசெண்டாற்
பொன்னின்மேருவை யடித்திருநிதியமும் புகழ்பெறக்கொடுவந்து
மன்னுமாந்தர்கள் யாவர்க்குங்கலிகெட வழங்கியதரிசிரத்தித்
தென்னனாட்டிற்கு நிகரிதவும்பிறிதோ செப்புதற்கிலைமாதோ. ௨

ஆதிநாயகன் றிருமணங்காணுதற் கமரராயாவரும்பெய்தக்
கோதிலாவடதிசைதணிந்திடவரமா குறுமுனிதனைநோக்கிப்
போதிநீயவட் பொதியமலையினைய்திப் புவியினைசமஞ்செய்யென்
றோதவைகிய தகைமைசேர்தநாட் டொப்புவேறுளதாமோ. ௩

வேறு.

மீனவன்மனையுங் குலசரிறைக்கவலை வின்றிமெய்யமகிழ்வுறமணமா
மேனிமிர்சமய மழிந்திடவையக மீதேமேவிடத் துயர்ந்ததுவுந்
தேனமாகடுக்கைச் சடையனட்டொட்டாமத் திருவிளையாடல்செய்ததுவும்
வானவர்க்கிறைவன் கோமுனிசாப வருத்தநீயப்பதுமிந்நாடே. ௪

பன்னுதற்கரிய பரமபொருளாறையுமபாண்டிநன்னாட்டணியெனையுந்
சொன்னயமுணரு முனிவராகலைகடேகசக்கரியாமருந் [ங்க
மின்னதன்மையமென் றிசைப்பதற்காங்கா தெறிமுனமோங்குபல்வள
டுன்னுமந்நாட்டின் சிறப்பினைமனத்திற் மேருடுறியவாறுசொல்வாம். ௫

வேறு.

செந்நெலேலகன்னல்காட்டச செழுங்கன்னற்கமுகுகாட்ட
மன்னியபூகமேலாய் வளர்தருந்தெங்குகாட்ட
நன்னலமிகுந்ததென்னை நறியபூதாலங்காட்டத்
துன்னியவமைகள்வானைத் தொடர்தருமேனிகாட்டும்.

பணிபடுசோலையுற்ற பன்மலருகுத்தேனும்
கனிகசிந்தொழுகுந்தேனுங் கருமபிழிதேனுமேதி
மனதினிற்கன்றையுள்ளிவழி தருபாலுமொன்றா
நனிபணைபாயமீன்க ணன்குண்டுகளிக்குமாதோ.

பனையுறுகனிகள்வீழப் பாங்குறுமிளநீர்தள்ளிச
தினைநறுங்கமுகின்பாளை சிதைத்துமாக்கனிகளோடுஞ்

புன்னைகனித்தாற்றைமோதிப் பொருவறுங்கனிகள்வீழ்த்து
நனிவராறுள்ளியோட நறுஞ்சுனைபயந்திலாழும். அ

பங்கயம்விளக்காய்நீலோற் பலங்கலகண்களாகப்
பொங்கர்வண்டினங்கள்பாடற் பருணிதர்புகல்பாட்டேயக்
கங்குபாகலின்பழத்தைக் கடுவன்மத்தளமுழக்கச்
சிங்கலின்மயில்களாடுந் திருநடமருதங்காணும். ௯

மங்கையர்மகிழ்நரோடு வாவிநீர்படிந்துசெல்லக்
கொங்கையிற்புனைந்தசந்தக் குங்குமமலரின்றேனும்
டொங்கிநீர்புரண்டுசென்ற புதுமணமேலாடைமற்று
மெங்கணும்வாசம்வீச வெழின்மதுகரங்கண்மொய்க்கும். ௰

பங்கயமுளையுழந்தும் பசும்பொனனும்புரண்டுவீழச்
சங்கினஞ்சொழுமுன்முன்னோர் தானுழுமாறுபோதச்
செங்கயறுடிப்பவாமை தலைபுடைசுரிப்பமற்று
மங்கணம்வராலுநண்டு மளைநரவுழுவர்மள்ளர். கக

கன்னலையொடித்துமேதிக் கடாவினையடிப்பக்கன்னன்
மன்னியமுத்தமந்து வயலகரிற்றெரிந்துமின்னைப்
பின்னவையனைத்துமள்ளர் பிறழ்ந்தரசசேறுசெய்து
செந்நெலைவாரிவாரித் தெளிப்பர்கண்மகிழ்வின்மாதோ. கஉ

கொங்கையினபாரந்தீன்ற குழவியைவளர்க்குமாறு
தங்கணாற்பனையினூறு நறைக்கிடத்தண்ணீர்பாடச்சி
மங்கைபங்கமாவோனெருண்டர் மலைப்பகைதுறப்பதேய்ப்பச்
சிங்கல்செய்களைகளைந்து சிறப்பொடுவளாப்பமள்ளர். கங

பூசையோரிடத்திலீன்ற பறைத்தான்புரக்கவேண்டி
யாசையாற்பல்லிடத்து மமைப்பதுபொருவநாற்றைக்
காசணிதனத்துமின்னார்கைகளால்வாரிச்சென்று
தேசுடைக்கழனிதோறுஞ் சீருறநடவைசெய்வார். கச

பரவைநீர்படிந்துசெல்லும் பசுநிறக்கொண்டனைப்பண்
விரவியநாட்களோடு வெண்மதிசெல்வதென்ன
மரகதந்தளிர்த்தாற்போலும் வளர்தருபைங்கூழுடு
சரதநித்திலங்களீன்று சங்கினந்தவழுமாதோ. கரு

வேறு.

[illegible]ளைகளை யாற்றுவீரெனக்
இன்[illegible]மொ[illegible]யவர் கிளையொடெய்தியே

வெள்ளனம்பெடையொடு விலங்கப்பண்ணையிற்
கள்ளமில்லாதுறுங் களைகளைந்தனர் கசு

பங்கயங்குமுதநீ லோற்பலங்களுஞ்
செங்கைகளாற்பறித் தெறிந்துஞ்சேயிழை
மங்கையர்தம்முகம வாய்கண்ணீரிடைத்
தங்குவகளையினுந் தளிர்ந்ததென்பரால். கஎ

அல்லிசெந்தாமரை யலர்ந்தபூவினம்
புல்லியமதுநுகர் பொறிகொளவண்டினம்
வல்லியர்முகங்கண்வா யிதழின்மொய்த்திட
மெல்லியகைகளால் விலங்கவீசுவார். கஅ

நனைமலர்ப்பங்கயங் களையநங்கையர்
சினமொடுமுள்ளுறுங் கொடியைத்திண்டலும்
புனைகரங்கிழித்துப்பல் புண்படுத்தின
தனைவதைப்பவர்க்கிடர் தாஞ்செய்யார்களோ. க௯

விரிமலர்க்குவளையை வீக்கச்சென்றிடு
மரிவையர்கால்களை யணைத்துப்பற்றுறப்
பரிவுடன்றுன்றரும் பாலர்மேல்வரும்
விரவலர்கான்மிசை விழுவமானவே. உ௦

அம்புயங்குமுதஞ்செவ் வாம்பலாதியாய்
வம்பவிழ்மலரவர் வதனம்வாய்கண்கட்
கிம்பரின்மாறுநந் திமைக்குமேலதைக்
கொம்பனார்களைதலிற் குறையுண்டாகுமோ, உக

பற்பலநிறத்தன மலருமைங்கொடி
சிற்சிலமருங்கெங்குஞ் செறிந்திருப்பது
நற்பயிர்த்தோற்றமு நாகம்வாழ்முகில்
விற்பலவுடனிம்பர் விளங்கிற்றென்னவே. உஉ

இன்னனகளைபறித் தெறியுமாதரார்
மின்னிடைத்துவளவம் மிளிர்பைங்கூழிடைத்
தன்னடிபடுத்துவண் டினங்கள்சார்வுற
மன்னியகரைமிசை வருகுவாரரோ. உங

பாசிழையார்களை பறித்தபண்ணையி
னேசமாய்முன்புபோ னேர்ந்தவன்னங்கள்
கூசிமெய்வாடின கொடுஞ்சமர்த்தலை
யாசைநாயகர்த்தவி ரரிவைமாரினே. உச

தன்னுயர்பொருள்கெடத் தாழ்ந்தநாளினு
நன்னலக்கிளைக்கரு ணலமுற்றோனெனத்
துன்னியமலர்வளா மிழந்துமெ(ந)ால்பனை
யன்னங்களுண்ணமீ னளித்துக்காக்குமால். உரு

மாநிலக்கிழத்தியின் வணமைகண்டநா
மேனிமைத்துறசெயல விரங்கக்காண்டுமென்
போனைய கண்களுக் கிரிமையாகிய
மேனலமுமப்பயிர விளரினுயர்நதே. உசா

வேறு

நென்முளையனைத்தும்வெள்ளை நித்தொநிலத்திற்றோன்றிப்
பின்னைபசலையுற்ற பெற்றிமே மாங்கதிகமெல்லாந்
தங்கிமம்வெளுத்துப் பினனே சாருமபசுமைகாட்ட
லன்னை நன்குணத்தை சேயா லறிகுறியாயிற்றன்றே. உஎ

ஆடவர்க்கண்டோணரி யஞ்சலிபேதைமான
நாடிவிண்ணுயர்ந்துசென்ற ரவிநரும்பைங்கூழெல்லாம்
தேடருமங்கையாரச் சிராங்கயிற்றதுணைநல்போலக்
கூடியகதிர்ச்செந்சாலிக் குலைமுகங்கவிழ்நமாதோ உஅ

கருமுதிர்மாதரார்மெய் கவினொடுபசுமைகாட்டும்
பரிசெனக்கதிசெஞ்சாலி பழுத்திடப்பருவமோர்ந்து
கருவிகளுடனுமள்ளர் கதிரொடுபலருஞ்சேர
வரிகுவர்தலைவர்க்குற்ற படிந்தவர்மட்குமாம்போல உகூ

ஆற்றல்சால்கல்விசேர்ந்த மறிஞரையரபெண்ணுது
போற்றுநல்செய்துமேலோர் பொருவறுமிடத்துய்த்தென்னச்
சேற்றிடைபிறந்தவான செந்நெலின்கதிர்களெல்லா
மேற்றலைசுமந்துமள்ளர் வெங்களமதனினுய்ப்பார். கூய

முன்னைநாட்சினத்திறுர்த முகில்களைச்சிறைசெய்தாண்ட
மன்னவர்புகழுநிம்ப மாலையான்வரைகளெல்லாந்
துன்னியசிறைமைவுத்தென்னச் சொல்லருஞ்சுமைகளெல்லாம்
பொன்னுயர்மேருநாணப் போர்களங்கியற்றுவாரால். கூக

மலையெலாநிலத்தில்வீழ்த்தி வானவர்க்கிறைவனாரு
முலைவுறுமுகில்காலை யுணங்குறமிதித்தலையப்
பலபலபோரின்மள்ளர் பயன்தருங்களத்திற்றள்ளி
வலமிகும்பகட்டினங்கட் பிணித்தவையுழக்குவாரால். கூஉ

உடலிடையுயிருஞ்சேர வுறுபெயரொன்றதாய்ப்பின்
னுடலிடையுயிர்நீங்கிற்றே லுறுபெயர்வேறுமாறு
மடலிடைச்செந்நெல்சேர வழங்கியபெயரொன்றாய்ப்பின்
மடலிடைச்செந்நெனீங்க வழங்கியபெயர்வேறான. ௩௩

வையினையகற்றியார்ந்த வளியெதிர்தூற்றலோடுங்
கையகல்பதர்தூண்மற்றைக் கழிவையும்புறத்திலோடு
மையைதன்பாகன் றொண்டர்க் கன்புசெய்பவருளத்திற்
பொய்முதற் றீயவெல்லாம் பொருக்கெனப் போகுமாறே. ௩௪

வேறு.

முடியுளவரசர்க் காறிலொன்றளித்து முதுநிலத்தவர்க் கருளன்னக்
கொடிபடைத்திலங்குஞ்சுந்தரமூர்த்திகோவிலுக்கொருபங்குகொடுத்து
வடுவிலாநன்னூ லுணர்மறைப் படியே மற்றையோர் தங்கட்குமுதவிப்
படியினிற்சகல விளைவுங்கைக்கொண்டு பாவலர்புகழ வாழுவரால்.

வேறு.

மேகமுங்கரியு ம்பிளிர்சோலைவா
யாகமுஞ்சடங் கந்தணரிற்கணே
யோகமுந்தவ முமுயர்ந்தோர்கள்பாற்
போகமும்பொலி வும்புரமெங்குமே. ௩௬

ஓதுவார்க ளுயரெழுத் தஞ்சுமே
வாதனைப்பிணி யும்வர வஞ்சுமே
நீதிமன்னர் நெறியுமங் கற்பினே
மாதராரும் மருவுவர் கற்பினே. ௩௭

பூவின்மேவும் பொறியொடுவண்டினங்
காவின்மேவுங் கலையொடுடானின
மாவின்மேவுவ வான்பொருளோங்கற
நாவின்மேவுவ நன்மொழிமெய்ம்மையே ௩௮

கோடனைத்துங் குழையுஞ்சுரும்புகள்
காடனைத்துங் கழையுங்கரும்புகண்
மாடனைத்தும் வளையுங்குவளையே
பீடனைத்தும் பெறும்பெருநாட்டினே. ௩௯

சோலையிற்படி யுஞ்சுரிவண்டினங்
கோலவாவி மலர்மதுக்கொள்ளுமாற்

சாலுமத்தட மீதுறத்தாவிய
சேலுமக்கனி தின்றுகளிக்குமால். ௩ய

தளமலர்ப்பணைச சார்பிற்பலாக்களே
வளமிகுந்த வனத்தும்பலாக்களே
குளனிருங்கரை யுங்குளிர்மாக்களே
கிளையுடன்மயற் கேற்கிளர்மாக்களே. ௪க

மாடு போதகம் வண்டிறை போதகம
பாடு மம்மனே யேபயி லம்மனே
தேடு மாலை திகழ்மண மாலையே
நீடு கேதன நீடவர்க்கே தனம். ௪உ

கோட ரங்கள் குதிக்க வனக்குழாந்
தாட ரங்க நடமமேரோவியே
யாட ரங்க தரிவையாச் சேர்நதவா
பீட ரம்பொரு வேற்கட்குப் பேதுறும். ௪௩

இன்னி யற்கனி யாரிசை நெற்றிலு
மன்ன மனனவ ராவணத் துய்ப்பதுந்
நெங்நென் முந்தத் தொடுசெறி கண்டருங்
கன்னன் முழுநங் கழைதரு முந்தமே. ௪௪

ஆலைவாய்க் கரும் பார்நரு மோதையுஞ்
சோலைவாய்ச் சுரும் பார்த்தெழு மோதையும்
காலைவாய் மறை கற்பவ ரோதையும்
வேலையோ தையின் மிக்குவி ளங்குமால். ௪ரு

வேறு.

விண்ணினுயர் கொரவனா வேறத்தின் கட்டருகிந் திலங்களோடு, மண்ணினுயர் நறும்புன்னை விரையரும்புந் தலைந்தலையே மயங்கித்தோன்ற, வெண்ணிறமாய்த் தானுயிர்த்த முட்டை.தனை யுணர்வரிதாய் வெருவிநாணிப், பண்ணிறைவண் டினம்பயிலு நளினமலர் மீதனம்போய்ப் பரிவுகூரும். ௪௬

வெண்கொடியோர் பாறழுவக் கருங்கொடியோர் பாலில்வந்து விரவப்பணனைத், தண்பசிய கொடியொருபாற் பவளவல்லி யோர்பாலிற் றழுவநாப்பண், வி ணபரவு நெடுங்கமுகின் மஞ்ஞையுறப் பெருங்காற்று விசிக்குந்தோற்றம், பண்படுநாற் றிசைக்கயிற்றிற் பரவுகழைக் கூத்தியரின் பரிசுகாட்டும். ௪எ

பலமுருக்கின் மலர்சொரிய வதன்மீதிற் றோகைமயில் பரவுந்தோ
ற்றந், தலைமதனின் மாதர்திருச் சாயலுக்கு நாணியழல் சார்வதேய்ப்
பப், புலமதனில் வேங்கைநறு மபூவினமிசைச் சக்கரியமிருந்திர் பொருந்துந்
தன்மை, நிலைமையுறு பொற்றொழில்செய் கம்மியர்களுலைக்கரியைநிகர்
க்குமாதோ. ௪௮

## வேறு.

மங்கையர் நகிற்கு நாணி வானுற வோங்கு தெங்கு
தங்கிய குரும்பை தன்னீர் தருபல வொழிக்குமாறே
சிங்கலி றடைகளன்றோ செறியுமப் பைங்கதலியெல்லாந்
தங்களி னுறும் பெண்ணைத் தாமுகங் கவிழ்ப்பதாமால். ௪௯

பங்கய முகங்கண் டஞ்சப் பவளவாய்க் கலவிநாணச்
செங்கய னீல வீயுஞ் செவ்வரி விழிக்கு நாணப்
பொங்களி முரலுங் காந்தட் பொருவிலாக் கைக்கு நாண
மங்கையர் நதியி லென்று மகிழ்ந்துநீ ராடுவாரால். ௫௦

மேனடை கற்பா னுன்னி வெள்ளனம பிடிபின செல்லப்
பான்மொழி தெரிதற் குன்னிப் பைங்கிளி குயிலும் போத
மான்விழிப் பார்வை கற்பான் மருங்குறத் தோகை மஞ்ஞை
யூனமில் சாயல் காண வுலவுவ ரொளிகொண் மாதர். ௫௧

காரொடு மிகல்வ மின்னார் கதுமலர்க் கூந்தல் பௌவ
நீரிடை நுரையை யன்னா நெடுந்துகி லிகல்வ செந்நெற்
போரொடு மிகல்வ மாதர் புணர்முலை பொருவில் வீரர்
தாருடை மார்பை யன்னார் தடங்கண்க ளிகல்வ மன்னோ. ௫௨

ஊன்கழி சங்கைப் பேதை யாருயா பாண்டமாக
மீன்களோ டுறையு மாமை வெரின்மிசை யடுப்புக் கூட்டித்
தேனுலை நீரா யஃதிற் றிகழ்முத்தி னரிசி பெய்து
மேனலத் தல்லி வீததீ யெனவிளை யாடு வாரே. ௫௩

வேதநன் குணர்வோ ராற்றும் வேள்வியின் புகையு மாதர்
கோதைகட் கிடுவ தான குளிர்நறும் புகையும் பின்னு
மோதன மமைக்கு மட்டிற் புகைகளு மொன்றாய்க் கூடிச்
சீதங்கொண் முகில்க ளென்னச் சென்றுவிண் படர்வ தாமே.

கருந்தடங் கண்ணி னாருங் காளைய ரெவரு மேன்மை
பொருந்திய கல்வி செல்வம் பொருவறப் படைத்த வாற்றால்
விருந்தினர் தமக்கு மீசன் மெய்யடி யவர்க்கு நோயால்
வருந்தினர்க் கிரவ லோர்க்கு மனமகிழ்ந் துதவு வாரே. ௫௫

தேடுவ பொருளுஞ் சீர்த்தி செய்குவ தறமு நன்மை
நாடுவ தானபொற் பாத நவில்வது கதை புராண
மோடுவ பலங்க ளுமை யொடுங்குவ பகைகண் மூன்று
மாடுவ மயில்க ளென்ன னகன்புன னாட்டி னெங்கும். ௫௬

குற்றமில் லாதா லீற்றிற் கூற்றத்தின் பயமு மில்லைக்
கற்றில ரிலாதா னெஞ்சிற் கடுஞ்சினம் பொறாமை யில்லைப்
பற்றல ரிலாதா லென்றும் பயிற்றருஞ் சமரு மில்லைச்
சிற்றறி வினரி லாதாற் சீர்த்திதேய வில்லை மாதோ ௫௭

சந்தன மலரின் வாசங் கமழ்தரு சாலை சோலை
நந்தன வனங்கள் பேரூ ராடிய வாகை யெங்குஞ்
சுந்தர மூர்த்தி நாளுந் தொலைவற வணக்க வேண்டிப்
பந்தி பந்தியி னெற்றுய்யப் பண்டிக ணிறையு மாதோ. ௫௮

வேறு

எந்நாட்டுப் பெருவளமு மென்னாட்டும் பொன்னாட்டி னியல்புமெல்லா
மின்னாட்டுந் திருமேனி மின்னாட்டு மரனரசாண மேன்மையாலே
யிந்நாட்டுக்கிணையாகா தெனவுயரும்பெருஞ்சீர்த்தி யிசைகொள்பாண்டி
நன்னாட்டிற் சீர்சிறந்த கூவனகா வளஞ்சிலது நயந்துசொல்வாம். ௫௯

---

திருநாட்டுப்படலம் - முற்றிற்று.

—*—

ஆக படலம் உக்கு - திருவிருத்தம் - அ0.



உ

சிவமயம்.

# திருநகரப்படலம்.



இந்திரனுறையும் பொன்னகர்தன்னோ டெழின்மிகு மளகைமாநகரு
மிந்தநன்னகருக் கிணைபெறாதெனவே யாவருமியம்புதற் கியல்பாய்க்
கந்தமாமலரா னென்றும்வீற்றிருக்குங் கடிமனைபற்பல செறியச்
சுந்தரமூர்த்தி யினிதமர்ந்தருளுந் தூயசீர்க்கூவன்மா நகரே.

எத்திசையிருந்து மெத்திசைகருதி யேகுவோர்முத லியாவரையு
மித்திசைகருதி வருதிர்நீர்பசிதீர்ந் தினிதுறச்செல்லுமி னென்றே
யத்திசைகருதி யழைப்பதுநிகர்ப்ப வணக்கொடியுலவு மாற்றலினு
லித்தலத்துயர்ந்தோர் கூவன்மாநகரென் றியம்புதற்கியைந்துளதாமால்

பொன்னகர்தன்னையே நன்னகரெனத்தம் புந்தியிற்கருதிய மமரா
ரிந்நகரெழிலைக் கண்டகமகிழ்வா லிருந்தொன்னகரைத்தா மிகழ்வார்
முன்னுறுமமணர் சமயநன்றெனவே மொழிந்தவர் சம்பந்த ரருளாற்
றுன்னுநற்சைவ முணர்ந்துமுன்மதத்தைத் தூசித்துப்பேசுமாறேய.௩

வண்டினங்குடையமுகைபுடைந்தவிர்ந்த மலருறுதேன்மழைபொழியுந்
தண்டலைமிசையிற் கருநிறமுகில்கள் சார்வதுதன்னிடத் தறுகாற்
பண்டரமதுவை யளித்திடாநறுங்கற் பகங்களைப் பழிக்குமென்றஞ்சி
யண்டர்கட்கிறைவ னேவலாலிவணுற் றடைந்திடைதடுப்பதுகடுக்கும்.

கொந்தலர்குழலார் மாடமீதினிற்றங் குழற்கிடுநறும்புகை பருகிப்
பந்திபந்தியின்மீப் பரவியமுகில்கள் பௌவநீர்மிசைபடிந் தெழலு
மந்தமிலாழக் கடற்பயமுழுது மகின்மணாக் கமழ்தரு மெனினக்
கந்தமார்தூமம் புகுந்தசாளரத்தின் மனைகமமலயக்கமுறுதற்கெளிதோ.

கைவளைகறங்கக் கண்டனமசையக் கார்நிகர்கூந்தல்கள் சோர
மெய்யணியிலகச் சிற்றிடைதுவள மெய்யொழுவுயிர்ப்புமேலோங்கச்[த்
செய்யகாலணிகள்கலகலென்றொலிப்பச் சிந்துபந்தடிக்கு மங்கையரை
துய்யவரெனினுங்காண்டொறுமதனன் றெரிமலர்க்கணைக்கிடைகுவரே

மாடமாளிகைகள் மண்டபம்பலவே வானுயர்சிகரங்கள் பலவே
நீடுசாளரங்கொ ளரங்குகள்பலவே நிறைமணிச்சாலைகள் பலவே
தேடருஞ்செந்நெற் களஞ்சியம்பலவே சித்திரக்கூடங்கள் பலவே
யாடரங்குகளும் பலபலதேவர்க் கமைத்தவா லயங்களும் பலவே. ௭

கன்னிமாபலாக் கனிவருக்கமும்
பன்னருங்கறிக் கிசைபல்பண்டமுந்
துன்னும்வாசநற் றெருங்கள்மற்றவு
மன்னிவீதியிற் றலைமயங்குமே. ௧௬

உருப்பசிக்குநே ரொளிகொண்மாதரார்
பொருப்பிணைத்தனக் கலன்பொலிந்திட
விருப்புறத்தெரு வீதிவீசுநீர்
கருப்புரத்தொடுங் கலவைநாறுமால். ௧௭

பாடுவார்பலர் பண்டமைப்புறச்
சூடுவார்பலர் வாசநெடுந்தொங்கல்க
ளூடுவார்பல ரூடறீர்ப்பரக்
கூடுவார்பலர் கோநகர்க்கணே. ௧௮

கொங்கைசேர்வரக் கூடுறுமெல்லாய்ப்
பொங்குதாமமின் ஞெலிப்பர்ப்புணையயா
மங்கலச்சதி வரம்பிறுடைரங்
கெங்குநூபுரத் திசையிமீட்டுமே. ௧௯

கந்துகமபடுங் கொருறுங கவின்சுவா
சிந்தும் பணமணி செறியவன் செண்டிடுறுன
மூந்து வீசலு மொயத்த பணமணி
தந்த மேருவின் றனைமை மெய்யாமமே. ௨௰

திருந்து நற்சிறு செய்யயானைப்பட
பொருந்து மீதுவிட்டுபாய்ம் பொற்புமுன்
வருந்த வின்னந்தி முாசசைச வாரத்தாம்
பருந்து முன்றிடும் பரிசு காட்டுமே. ௨௧

வேறு.

மூன்னொநா ளொருவன் செய்த பெருதுவினை யனைத்துங் கூட்டிப்
பின்னொநா ளவனுக் கீயும் பெயர்க்கரு மாயை போல
வெந்நலைப் பொருளும் விற்குங் காலத்திற் பொருளீந் தேற்றுப்
பின்னதை விலையும் பேசிப் பெறும்பொருட் குதவல் செய்வார். ௨௨

தவறிய தெடுத்தற் கொல்லாச சனங்களு னெருங்கும் வீதி
பவமிலா மடவார் மைந்தர் பலகையினறி முட்டுநர் தோறுங்
குவிமுலை புயத்திற் றாக்கக் கொண்டக மகிழ்வர் பல்லோ
ரவமிலாச் சிலர்க ளாற்ற தழுங்கிநொந் திடைவர் மாதோ. ௨௩

மின்னிய மணிபொன் மற்றும் வேண்டுவோர் வேண்டுமாறே
யின்னன பொருளீங் கில்லை யென்பதற் கிலதாய் நாளுந்
துன்னியே வாங்கு வோரும் விற்பவர் தொகுதியாக
மன்னுவ வளைகை நேராய் வழங்குமா வணம னந்தம். ௨௪

மங்கல வொலிகண் மிக்கு வழங்குமந் நகரி லென்றும்
பங்கய மலரின் மேவும் பண்ணவன் றனது செய்ய
பொங்கொளி முகமே யாதி பொற்சரண கடையாய்த் தோன்றுஞ்
சங்கைகொள் வருண நான்கோர் சாதரு மியல்பு சொல்வாம். ௨௫

ஓதுத லோதுவித்த லுவப்பொடு மணங்கள் செய்தல்
பூதலந் தனின்மற் றோர்க்கும் பொலிவுற மணஞ்செய் வித்த
லீதலு மீவோர் தம்பால் லேற்றலிவ் வறுவாற் றானும
வேதியர் மகிழ்வி னாந்த நகரிடை மேவு வாரே, ௨௬

வில்லொடு வேல்வாள் யானை வெம்பரி பொறியா றென்னச்
சொல்லிய படைக ளோடுஞ் சுற்றங்கண் முதலா யாறு
வெல்லுதற் குரியசேனை விளைத்தொடுந் தினமா றுற்று
நல்லற வின்பத தன்ன பொருளோரா டோறுந் தேடி. ௨௭

குடிபடை யமைச்சு நட்பு நாடரணாறு மோங்கத்
திடமுட னேதன் மன்றல் செய்குதல் படை பயிற்ற
லடன்மிகும் போர்செய் திட்ட லவனியைப் புரந்த லீத
லுடனக மகிழ்வானா மன்ன ருறைவரந் நகரின் மாதோ. ௨௮

காவலர்க் கமைச்சு மாகிக் காங்கரி னூல்க டோந்து
நாவலர்க் கிழமை பூண்டு நானில விளைவுஞ் செய்து
தேவர்கட் கினிதாய் மேவா செய்பிய வேதமோதித்
தாவில் காராள ரந்தந் தன்பதி மேவுவாரே. ௨௯

பன்னில விளைவுஞ் செய்து பார்புக முறங்க ளாற்றி
மன்னிய சீர்த்திநாளும வணிகாற் செல்வ மோங்க
மன்னர்பின் னவர்க ளாக மகிழ்ரொட் டியர்க ளந்தந்
தொன்னகர் தன்னி லென்றுந் துலங்கியே வாழ்வர் மன்னோ ௩0

பூவர சருக்கின் னட்புப் பொருந்தியும் விளைவு செய்துந்
தாவறும் பொருளுந் தேடிச சார்ந்தவர்க் கினிதி னீந்தே
தேவருக் கால யங்கள் சிறப்புற வியற்றி நாய்க்கர்
மேவருஞ் செல்வ மெய்தி யந்நகர் மேவுவாரே. ௩௧

மின்னவிர் மணிபொன் முத்தும் வேண்டுவ பொருள்க ளெல்லாங்
கன்னலின் சுவைபோற் பேசிக் கனிவுற வாங்கி விற்றும்
பன்னருங் கலைக டேர்ந்து பரமன்ருட் கன்பாற் சீர்த்தி
மன்னுமந் நகரி லென்றும் வாழ்வர்பொன் வணிகர் மன்னோ. ௧௨

கன்ருே டான்வ ருடைநாளுங் களிப்புற வோம்பல் செய்து
மின்பிறழ்ந்து சுப்பின் மாதர் வெண்டயிர் கடைந்த வோடு
மொன்றிய பலர்க்கும் பானெய் யுயர் தயிர் மோரு மீந்து
நன்றிகொ ளண்ட ரந்த நகரிலெந் ஞான்றும் வாழ்வர். ௧௩

நாட்டினிற் பொருந்து மைந்து நகர்படு பொருள்க ளோந்துங்
காட்டினிற் பொருந்து மைந்துங் கடல்படு பொருள்க ளைந்து
மீட்டுயர் வரைகண் மீது விளங்குவ பொருள்க ளைந்துங்
கூட்டிமே லவர்க்கு மீந்து சூத்திரர் குழுமி வாழ்வர். ௧௪

வேறு.

கன்னல்வின்மதன ஞான்முறைப்படியே காளையர் தோளுறக் கலந்து, நன்னலம்போல லீலைகள் பலவா னடித்துண வதரமு மளித்து, மின்னுதா ரியத்தாற் புணர்ந்த நங்கலவி விதமெல்லாஞ் சித்திரத் தமைத்துப், பொன்னவிர் மாடப் பந்திக ளிலங்கும பொதுமட வாரியல் புகல்வாம். ௧௫

மனையிடை யமர்வோர் மனைவியர் நறுநீ ராடிய வாறிரு தினமும், புனைநலத் துடனே புணர்ந்துபி னவரைவில் பொதுவிய ரகம்புக வவனைச், சினமொடு முனைநா ணீத்தன ரெனவே சேடமூவறு தினங்களினுங், தனமெனுந் தாம்பாற் பிணிந்நகரி னம்பாற் றடஞ்சிறைப் படுத்துவர் மன்னோ. ௧௬

வண்டுகள்படியா வாடுறு மலர்ந்தா வானவ ரெனக்கண்க ளிமையா, மண்டனின் மிதியாப் பாதங்க ளாவாய் வயங்கிய சித்திரக் காட்சி, விண்டனி னுறைவோர் பொதுவியர் கலவி வேட்டுமண் ணுலகிடை யுற்றுத், தண்டலின் மனையினைப்பொது வியர் தஞ்ச மயம் பார்த்திருப்பது மானும். ௧௭

விளக்கிடைவிழுந்த விட்டிலைப்போலும் வெம்பிடி நசையினுற் கயத்திற், றுளக்குறுகயமு மெனவவர் மயக்குந் தொழில்களான் மனஞ்சுழன்றிடவே, யிளக்கமினெஞ்சும பாடலாலிளக வினியனநடங்களும் புரிந்து,யளப்பருந்தியமனைத்தையுங்கொள்ளையாகவேகவர்வர்களம்மா

ஓரெழுகடல்வரைப் புலகமெங்கணு
மீரெழுதலத்தினு மீசன்மாலயன்
சேரும்பல்பதியினுஞ் சென்றுலாவுவ
தார்பெறுஞ்சீர்த்தியந் தனிப்பொற்றேரரோ. ௫௪

இந்திரன்முதலவீ சானனீறதா
யுந்துமெணடிகையினு ளூற்றுநீடிய
பந்திபந்தியினுறை பற்பலுட்டவர்
சிந்தையினுறசெலுஞ் செயமெனுங்கயம். ௫௫

பச்சைமாப் பொறியுடைப் பகல்செய் பண்ணவ
னிச்செயந் தினஞ்சுற ணேமிக் குன்றினை
யசச ரில்லாதனைக் கணத்துலாய் வரு
மெச்சமி னீதியென் றிசைக்கும வாசியே. ௫௬

செயுந்தொழி லறிகிலா திகழு றுப்பில
ருயும்வகை யுணாவிலா துழலு மாக்களின்
பயமொழித் தினியன பகர்ந்துலா வுவ
தயையெனுஞ் சேனையிந் தரணி யெங்குமே. ௫௭

தொல்லுல கத்திடை நோனறிச சூழுகலி
யெல்லுறுங் கடுங்கதிர்க் கிடைந்து வாடிய
பல்லுயிர்க் குலங்களும பரிவு கூாதர
நல்லருட் குடைநிழல் கவிகரு நாடெலாம. ௫௮

துன்னிய பண்ணையிற் றுலங்க வுய்ந்தன
மன்னிய நாட்டுளோா மகிழ்விற் றந்தன
மின்னிய முடியுள வேந்த ரீந்தன
மென்னிறை காஞ்சிய நிரை துலங்கவே. ௫௯

பன்னலிற் றெருக்தன பற்ப ரூட்டுறை
மன்னவா கொடுத்தன மற்றுளோ ரெலாம
தன்னக மகிழ்வொடு தந்த வெள்ளிபொன்
மன்னிய சாலைகள் பல வயங்குமே. ௬௦

கன்னலிற் றந்தன கழைக டந்தன
செங்நெலிற் றந்தரித் திலமுஞ் சேயொளி
மன்னிய துவர்மர கதங்க ளாதிய
பன்னரு மிரத்தினச் சாலைப் பந்தியே. ௬௧

பற்பல நிறத்தன பரிகளுக் குந்தன்
பொற்புறு நடையினைப் புரிந்து காட்டுவ
நெற்பொலி பண்டிக ணிரையை யீர்ப்பன
வெற்றியே றுறுநிரை விளங்கும் பற்பல. ௬௨.

வெள்ளியங் கிரியென விளங்குமோ தனந்
தெள்ளிய நறுநெய்பால் செறிக மித்திர
ளொள்ளிய பாயச முதல வூட்டுவ
தெள்ளருஞ் சாலைக ளிலக்கி லாதவே. ௬௩.

அருந்தவத் தினரொடு மரிய யோகிக
ளிருந்திய துறவினர் சிவனமெய் யணைபர்கள்
வருந்துத லின்றியெந் நாளுமவ வாழ்வினிற்
பொருந்து மண்டபம்பல பொலிந்து தோன்றுமால். ௬௪

அதன்வடக் கிலக்குமி யமரு மண்டபஞ்
சதிருட னதற்கயல சாருக் ராணநல்
விதமுட னதற்கிய லின்ப போனகம
புதுமையி னருளிடம் பொலிந்து தோன்றுமால். ௬௫

வேறு.

இனையதிருக் கோவிலுக்கு நாப்பணிற் சுந்தர மூர்த்தி யினிதின் மேவும், புனைமணிக ளாலிசைத்த கெற்பகிரகமுமவலது புரத்திற் சேர்ந்தோர், வினையகற்றுங் கணபதியு மிடப்புரத்திற் சொக்கலிங்கம்விளங்க முன்னால், வனைமணியா லியனற வந்தமண்டபமா மண்டபமும் வயங் குமாதோ. ௬௬

ஆறுகால் மண்டபமு மதனயற்சபாநாத ரமருங் கோவிற், கூறு முன்னை மண்டபத்தின் குண்பாற்றீர்த்தமும் பாங்கர்க் கொடியுற் றோங்கு, மாறிறிகழ் மண்டபமுஞ் சந்திரோ வறுங்குசங்கப் பலகை யார்க்குந், தேறுதல்செய் யனக்கொடியு மபனுதபூசைசெய் மண்டபமு முண்டால். ௬௭

தென்மேற்கிற் கூபமதன் வடக்கினிலிச் செகத்திலுள்ளோ ரெவ ரும்போற்று, நன்மார்க்க மிகுமிராமலிங்கதேசிகர் கோவி னண்ணும்பா ங்கர், மின்சேர்க்கை யெனவொளிர்சுந்தரசாமி கோவிலுமுன் விளமபு ங்கூடந்,தன்கீட்டிக்கினிற் பழனிக்குமரசாமியின் கோவில்சாருமாதோ.

அனையவதன் கிழக்குயர் சுந்தரசாமி யதற்கயற்சுப்பையசாமி, நினைவினுயர் மௌனகுரு சாமிபுகழ் நிகழ்வுறுங் குமாரசாமி, வினையகலு மிரவணப்பசாமி திருவாலயங்கண் மேவபபாங்கர்ப், புனைபுகழ்க்குமார சாமியு மினிதிற் பொருந்திய கோவிலுமுண்டாமால். ௬௮

## வேறு.

கல்லடித்தடுக்கி யிடையிற் காச்சாந்து கவின்பெறப் பெய்தழகு டனே, பல்விதவுருகக ளமைத்துக்காண்றுவிப் பணபிற்போதிகைகளு த்திரங்கள், புல்லுறவிசைத்து மீதுறபகலலாற் பொலிவுற வேய்ந்தத ளுப்ப, மெல்லுறுமணிகள் குயிற்றிநட்கதிபோ விலங்குமண்ட பம்பல வுளவால். எ௰

இனையசீர்படைத்த சுந்தரமூர்த்திக் கிலங்கியமேடமா மதியிற், ப னிமதிவளரும் பக்கத்திற்றுசாரோ கணத்தொடுதிருவிழாப்பயிற, னனி யுயர்கடக மதிகதிரமதியு நனகுறக்கூடுநா ளதனிற், கனிவுடனினிய தே சிகபூசை களிப்புடனியற்றுவ துளதால். எக

கன்னிநன்மதியி னோணபுடைத்திருநாட் கார்த்திகை நற்றிருநாளு மன்னியமகர மதியுயாபூச மதியுடன்கூடுநா ளினுமீன, றன்னிடைக்க திரா ருத்திரத்திருநா ளொடுபினுஞ் சாற்றுதற்கரிய, நனனலத்தினங்க டொறுமதிதோறு நனியுயா திருவிழா நடககும. எஉ

நன்னலமிகுந்த சுந்தரமூர்த்தி நன்குறு மாலயந்தனிலே
பன்னுதற்கரிய பல்லியமுழங்கப் பண்மிகுங கருவிக ளிசைப்ப
மன்னவர் முதலோர் கரஞ்சிரங்குவித்து வணங்க நாடொறுந்திரிகாலந்
தன்னிலுமுன்னூ லுரைமுறைப்படியே நான்புரி பூசனையுளவால். எ௩

ஈதலான்மறையோர முதலினோர்தங்கட் கியற்றிய வன்னசத்திரத்தி
லோதன நூறூட்குயாதினந்தினமு முதவுதற்கருளி மற்றதனின்
மீதுறவரினு மகிழவுடனருளி மேதினி தனினமரேோர்க் கெல்லாம்
போதுறவிரண்டு காலமுமன்னம பொருவற வுதவுவதுளதால். எச

மத்தியானத்தில் வருமகுதிகட்கு வயிற்றழனமாறற நாடோறுங்
குத்துவர்மூன்று கோட்டைபுலலென்னிற் கூழிடுமுறையினை வகுத்தே
யித்தலத்துளைப்ப தெவ்வணம்பினுநல் லெழின்மிகுசுந்தரமூர்த்தி
மெயத்தநற்புகழை முழுவதுமுணாத்தல் விரிமலரயனுக்கு மரிதால்.

நல்லியன்மிகுந்த சுந்தரமூர்த்தி நன்குறுநகாவள மதனிற்
புல்லியவறிவிற் கியைந்தமாத்திரமே புகன்றன மாணவுந்துடனே
யெல்லையில் புகழ்சே ரிரொட்டியாமேனு ளிந்தாமெய்தியவிதமுஞ்
சொல்லுதற்கரிய சுந்தரமூர்த்தி தோற்றமு மறிந்தவாசொல்வாம். எ௬

திருநகரப்படலமுற்றிற்று.

---

ஆக்கப்படலம் ௩-க்கு திருவிருத்தம்-கரு௬





கணபதி துணை.

சுந்தரமூர்த்திசுவாமிகள்

# திருமரபுரைத்தபடலம்.



தருமநன்னெறி யென்றுந் தழைக்கவு
மருவில் சீர்த்தியிம் மாநிலத் தெய்தவுந்
திருவுலாவிய சுந்தரமூர்த்தி சீர்
மரபினீர்மை வழுத்த லுற்றாமரோ. ௧

அரசெலாம்வந் தடிதொழுதேத்துவ
முரசின்பேரொலி யெனறுமுழங்குவ
கரைசெயற்கரி தாகியகாட்சிய
விரைமலாத்திரு மேவுமயோத்தியே. ௨

அன்னமாநக ரன்னிலறநெறி
துன்னவாரிரு டொலலுலகாண்டருள்
கன்னல்வின்மத னென்னக்கவின்கொளு
மன்னரன்னன் றயரதவள்ளலே. ௩

ஆறிரென்றுகொண் டண்டரிறைமிசைச
சீறிவந்த வசுரர் திரளெலா
நூறிவிண்ணவர் நோயமை யகற்றிய
மாறிலாவென்றி மாலைகொண் மார்பினன். ௪

துன்னுசீர்த்தி துலங்குந் தயரதன்
றென்னகர்க்கணிற் றென்றுமெ நாட்டுற்றுநீண்
மன்னர்பின்ன ரெனுமரபாலவன்
றன்னகத்திடை நண்புறச்சார்ந்தனர். ௫

முத்தொழில்வைசி யர்க்குமுன்மேவினு
மத்தொழிற்கவர் தம்மையமைத்திடா
துய்த்தநான்முறை யாலுயர்வேந்தர்பா
லெத்தலத்தினு மெய்திருப்பரால். ௬

வெற்றிவேந்தன் வியன்படையாறினுட்
சுற்றநண்ணுந் துணைப்படையாகியுங்
கற்றுணர்ந்துயர் காவலன்மந்திரத்
துற்றுநாடுவ தோர்ந்துரைப்பாரரோ.

பின்னும் பற்பல பேருதவித் தொழின்
மன்னன் சிந்தை மகிழ வியற்றலா
லின்னுயிர்த்துணை யாகுமிரொட்டிய
ரென்னவேமகிழ் வெய்திநட்டானரோ. அ

நண்புகொண்டமர் நாடனில்வேந்தர் கோன்
பண்புடன்புரி யுந்தவப்பான்மையாற்
றண்கடற்றுயில் வோனறையை செய்துநல்
விண்படர்ப் புகழ்ச சேயெனமேவினான். கூ

பின்னுமூன்று தனயா பிறந்திட
மன்னும் பின்னெவ ரும்மகிழ் வெய்தவே
பன்னுநூல்க ளனைத்தும வசிட்டன்பா
னன்னலத்தொடு கற்றுயர் நாளினே. க0

கோசிகன்பினர்க் கோதண்ட வத்தனு
மாசிறமபியு மன்புடனேகியே
நீசிதாடகை தன்னுயிர் நீக்கியத்
தேசிகன் குறை தீரவியற்றியே. கக

கருங்கல்லாகிய கௌதமன் றன்மனைக்
கொருங்குசாப மகற்றியுயர் தவன்
மருங்குசென்று மிதிலைமன்கன்னியைத்
திருந்துநன்மணஞ் செய்துதிருமபியே. கஉ

மழுவலானும்பின வாங்கநாண் வாங்குவிற்
றழுவுதோள னயோத்தியிற் சார்தலும்
வழுவினமனனன் மனமகிழ்வெய்தியே
பழுதிலாப்புவிப் பாரமபெறுகென. கங

தந்தை வார்த்தை தடுத்த மகாதென
மைந்தன் சிந்தை மகிழவினியைதலு
மந்தணா ரமைசசா மற்றியாவரும்
வந்துசேருமவவை புரிந்தானரோ. கச

மறைவலோருடன் மற்றுமுள்ளோர்களு
மிறைவன்முன்னரி னெய்தினர்நாளையே
முறையுடன்முடி சூடுகவென்னலும
பிறையணிந்திடப் பார்த்திபன்கூறினான். [illegible]

அரசன்கூறலும் யானையின்மீதமர்
முரசின்பேரொலி யெங்குமுழங்கவும்
பரிவின்மைந்தரைப் பார்த்துயர்கைகைபால்
விரைவின்வந்து விளம்பலுற்றுளரோ.

உற்றுரைத்தமை கேட்டுயர் கைகையன்
பொற்றொடிக்குப் பொருமையுட்டோன்றலு
முற்றன்கொண்கன் மொழிந்தவரங்களால்
வெற்றியெய்துவ லென்னுமவ்வேளையில். கஎ

மன்னர்மன்ன னவணுறமாதுநொந்
தின்னலெய்தினள் போலவிருந்தலு
மென்னகாரண மீதெனமன்றுணீ
நன்னலத்தி னவில்வரமுண்டரோ. கஅ

ஒருவரம்பரதன் புவியோம்பமற்
றொருவரத்தி னிராகவனேகிய
தருவுறும்பழு வத்திடைசார்கவென்
றிவைகூற வரசனுஞ் சோர்ந்தனன். கக

அனையகாலை யிராகவனத்தனை
நினைவினேடின னவவிடைநோதலும்
வினையிற்கைகையன் மெல்லியலெய்தியே
யினையபூமி பரதனுக்கெனவும் உய

மற்றுநீவரு டமபதினன்குயர்
கொற்றமாதவர் கூடுமவனத்திடை
யுற்றுமீடி யெனவுயர் மன்னவன
சொற்றனன்னெனத் தோகையியம்பினள். உக

சிற்றவையிவை செப்பிடக்கேட்டுடன்
பெற்றதாய்க்கும் பிறர்க்குமுரைத்துயர்
வெற்றிமேவிய வீரனுந்தம்பியும்
பொற்றொடித்திருவும் வனம்போயினர். உஉ

அய்யன்சீதை யருள்செறி தம்பியும்
வெய்யகானிடை மேவின ரென்றலும்
பொய்யின்மன்னன் பொறிகலங்கித்துய
ரெய்தமாநகர் மாந்தரிறங்கினர் உங

அன்பின்மன்சுத னுனவிராமனை
யென்பினூற்ற மிவனெனவுன்னிய
மன்பினென்னு மரபினர்யாவருந்
துன்பினோடந்தத் தொன்னகரோவியே.  ௨௪

## வேறு.

மனுமுதலாக விந்த மரபினி லிலக்கிலாதார்
புனைமணி முடிகடாங்கிப் புவியினைப் புரப்பதானு
ரினையன நிகழ்ந்ததில்லை யிராமனைப்பிரிந்திவ்வூர்வாழ்
மனைநல மென்னுமென்னு விரெட்டியர்வழிக்கொண்டாரே. ௨௫

சிலைநுதற் சீதைபின்னோ னுடனுந்தென்றிசையைநாடி
மலையொடுநதிகணீங்கி வர்மாலேலகினனென் றுங்கட்
சிலர்சொலுமொழியைக்கேட்டுத் தாமுமந்திசையைநாடிப்
பலபலவளங்களோங்கும் பாண்டிநாடுற்றாரன்றே. ௨௬

தென்னவனரசுசெய்யுந் திருவளர் மதுரைதன்னின்
மன்னிய சொக்கலிங்க ருடன்மகிழ் கயற்கண்ணம்மை
துன்னிய கோவிலெய்தித் தொன்முறைப் படியேபோற்றி
நன்னல மானசோதி மகிழ்துதி நவின்றுநின்றார். ௨௭

அனையவாறிருக்குங்காலை யந்நகரரசு செய்யுந்
தனைநிகரில்லாநிமலத் தாரினா னங்கண்மேவி
யினையவர் செயல்களெல்லா மியம்புறவறிந்து பின்னர்க்
கனிவொடு மன்பினோர்கள் களிப்புற வரிசைசெய்தான். ௨௮

அங்கயற்கணியொடீசர்க் கத்தசாமத்திலாற்றும்
பங்கமில்பூசைக்கன்பாற் பாண்டியன்மாலையீந்து
துங்கமுளிரெட்டிமார்தந் தொங்கலைசூட்டிப் பின்னுற்
சங்கையில்லவர்கணல்குந் தாமபுனைவீரகளென்னு. ௨௯

மீனகேதனனுங்கூற விளங்கிய வாதிசைவர்
பானலின் மொழியாள் பாகர்க் கம்முறைப்படியேசூட்டத்
தேனலர் தாரான்பின்னுஞ் செப்பின னிதுபோலென்று
மேனலமாக மாலை சூடுதல்மேன்மை யென்றே. ௩௰

அன்னநன்முறையினுற்று லாற்றுது மென்று கூறி
நன்னலமாகவென்று மம்முறைநன்கி னுற்றற்
கின்னியற்பொருளு நல்கிவேந்தரம் விடையும் பெற்றுப்
புன்னுமீனேக்கியீசன் பதமலர் பணிந்துமீண்டார். ௩௧

மற்றுமந்நாட்டினெங்கும் வளர்புகழ்க் கொருவனென
வெற்றிசேர் புயனேத்தங்கள் விழியிடைக் காண்கிலாமை
லெற்றினியியற்றலென்று வெழில்கொள் பால்வனத்தினெய்திக்
கொற்றமதூரத்தின்கீழார் சிவலிங்கக் குறியைக்கண்டார். ௩௨

கண்டக மகிழ்விற்பாங்கர்க் கயலினங்களித்துத் துள்ள
வண்டறை மலர்க்கைலாய கங்கைநீர் மருவியாடி
யண்டர்கட் கிறைவன்போற்று மண்ணலைப்பணிந்துவாழ்த்தித்
தண்டலை மருங்கிலுற்ற கோவிந்த முனியைச்சார்ந்தே. ௩௩

அவன்மலர்ப் பதங்கள் போற்றி யையவிராம நம்பி
நவையக றம்பியோடு நாயகியுட னுமே போநதான்
புவிமிசை யவர்கட்கானும் பொருவறு நெறியைக்கூறுந்
தவமுயர் முனியேயென்று மாதவனை சாற்றலுற்றான் ௩௪

தயரதன் சிறுவன்றன்னைச சார்வதற்கரிது நம்மா
லயல்செலாதிந்நாட்டி லமர்வதே நன்மையென்று
னயமிகு மிவராலிங்கு னல்லறமோங்கு மென்றும்
புயல்வணன்விளக்குமேலைப் பொருளுநன்மனத்துட்கொண்டே. ௩௫

அம்முனிபுகலக்கேளா வனைவருமனத்துட் கொண்டவ்
வெம்மைதீர் முனிவற்போற்றி விளைதொழிற் குரிமைபூண்டு
பொம்மென வவரவர்க்கும் புந்தியி னிசைவதான
செம்மைசேர் நகர்கடோறுஞ் சென்றினி துறைவதானார். ௩௬

இந்தநன்னெறியினுற்ற விரெட்டியர் மரபிற் றோன்றுஞ்
சுந்தரானந்தரென்றோர் சுகுணர்பற்பலநூ லாய்ந்து
கந்தமார் பொழிலினூரும் கார்தவழ்பொதிகை யெய்திச்
சிந்துவை யொருகைக்கொண்ட செழுந்தவ முனியைப்போற்றி. ௩௭

அகத்தியல் பகையைவென்ற வம்முனி விடைபெற் றேகிச்
செகத்தினி லெவரும்போற்றுந் திகழ்மகா லிங்கர்மேய
மகத்துவ முயர்நாற்கோண வரைமிசையுறு கோரக்கர்
முகத்தினி லெய்தியந்த முனிகழலிறைஞ்சியேத்தி. ௩௮

பின்னுமம்மலையிலுள்ள பெருந்தவத் தினர்களோடு
நன்னலத்துடனேகூடி நட்புமேலோங்க நாளும்
பண்ணுதற்கரியகாய கற்பங்கள் பலவுஞ்செய்து
மின்னவிர்வேணியானை விரும்பியாங்கமருநாளில். ௩௯

பவளவாயிதழும்முத்துப்பற்களுங்
குவளைநீள்விழியும்மறற்கூந்தலு
நவையிலாநுதலுஞ்சிபுருவங்கள்
குவிதலாகிதிமிருக்குயங்களும் ௫0

மற்றுமுற்றுமம்மங்கைவனப்பெலா
முற்றுநோக்கியுயர்மதனம்பினல்
வெற்றிமன்னன்மிகமெலிவெய்தியக்
குற்றமற்றுயர்கோதையையாண்ணியே. ௫க

மதியும்வெட்குமம் முகச்செவ்வியுஞ்
சுதைநிகர்க்குநல் மொழித்தோகையே
யிதமதாய்நினைப்பெ வரியாவர்
குதலைநன்மொழிகூறுகவென்றனன். ௫உ

அரசனிவ்வுரைகூறவம்மங்கையும்
புரசையானையு ாய்புகரீ ரு
ளிளைவாநர்சுர சப்பெயராமொ
வுரைசெயத்தண்டனுற்றுநெருங்கியே. ௫௩

கண்டுநேர்பொரியாய்மர் ங்காமன்விற்
கொணடேயுங்கலையா குலேந்தேனுந்தன்
சென்டினைத்தருஞ்சேர்த்தெனைக்காவெனத்
தண்டன்மெல்லியல்கான்மிசைத்தாழ்ந்தனன். ௫௪

புகலும்வார்த்தைதனைப்கேட்டலும்தூவமெய்
மிகநடுங்கிவிளம்புமறிவிலோ
யகமதில்லெனநந்தன்முனிந்திடற்
செகமெலாமோர்கணத்திடைதீயுமே. ௫௫

இவ்விடத்திலிராதிக்கணத்தின்வே
றெவ்விடத்தெனினுஞ்செல்கவென்னலு
நொவ்விடைக்குயிலேமனநோவது
செவ்விதன்றெனசசேரநெருங்கினன். ௫௬

மீறிமேல்வரக்கண்டந்தமெல்லியல்
பாறினள்பின்றொடர்ந்தவன்பண்புடன்
கூறும்வார்த்தையின்றுயக்குழல்பற்றிமீாத்
தூறுமாசையொழித்தகன்றனரோ. ௫ள

### வேறு.

கொடியோனிவைசெய்தகலவந்தக்கோதையழுதுதனையீன்றோ
னடிமேல்விழுந்துநடந்தவெல்லாமறையவுசநன்முகமுனிந்து
படிமேற்றீராப்பழியையிந்தப்படிசெய்தண்டன்கிளைநாடு
முடிவிற்பொருளும்பொடியாகமுடிகவெனவப்படிமுடிந்த. ௫௮

ஆதலாலத்தண்டனரசாண்டபுவியேதண்டகமென்
றோதுமடவியாயதுநல்லுசநன்மொழியாலவ்வனத்திற்
காதுஞ்சினக்கோளரிமுதலவிலங்குபறவைகாண்டரிது
சீதமலிநற்றவந்தோர்கள்சேர்ந்துநாளும் வாழ்வதுவே. ௫௯

நன்றித்தவஞ்செய்முனிவரெந்நாளுமவணின்மேவுவரா
லென்றுமுகில்கள்காற்பருவமேலைச்சிறந்துவான்பிலிற்றும்
வென்றியுடையாயிதுமுனைநாள்விளைந்ததெனமாமுனிகூறத்
துன்றுகழலோனவற்றொழுதுதுலங்குமையோத்தியிற்சேர்ந்தான். ௬௰

ஐயவிவைகண்முன்னிகழ்ந்ததெனச்சொல்சுந்தரானந்தர்
செய்யகமலமலர்ப்பதத்திற்சிரத்தைப்பொருத்திசற்றறிவே
னுய்யுமாறுபலவிதமுமுரைக்கத்தெளிவுற்றேனினியான்
செய்யுமாறுசொல்லுமெனச்சிந்தைமகிழ்ந்தாரியர்சொல்வார். ௬௧

சுவேதன்சரித்திரப்படல-முற்றிற்று.

---

ஆ படலம் ௧௪-க்கு திருவிருத்தம் - ௭௪௮.



## விடைபெற்றுமீண்டபடலம்.



ஆதிநூன்முறையாற்றவம்மகம்யோகமனைத்தினுமுயர்ந்துளதறனே
யோதுமவ்வறமெண்ணான்கினுமுயர்ந்ததோதனதானமாதலினாற்
பூதலமதனிலிளைத்துவந்தவர்க்குப்போதுறவோதனமருளி
மாதவர்மகிழவனக்கொடிபடைத்துவாழுதிபோதியென்றிசைத்தார். ௧

அன்புடன்சுந்தரானந்தரிவ்வாறறைந்திடவனைத்தையுங்கேட்டாங்
கின்பசாகரத்திலாழ்ந்தவரெனத்ததும்பிநயனங்களிப்புறவவர்தம்
மென்பதமலரின்முறையுடன்வணங்கிவிடைபெற்றுச்சதுர்வரையீசன்
றன்பதம்பணிந்தேயிருகரஞ்சிரத்திற்சாத்திநற்றுதிகள்சாற்றினரால். ௨

ஆதியுநடுவுமீறுமாயகிலபுவனங்களனைத்துந்தானுகி
நீதியிற்படைத்தல்காத்தலோடழித்தலெனுநெறிமூன்றிற்குமிறையாய்
மாதொருபாகமாகிநின்றருளும்வள்ளலேமறைகணேடரிய
சோதியேசதுரவரைமிசையோங்குஞ்சுந்தரமாலிங்கநாதா. ௪

காமனையெரித்தாய்கிரதிநொந்தழக்கருணையினவட்கருள்புரிந்தாய்
சோமனைநதியின்மருங்குறத்தனதுதுய்யசெஞ்சடைமிசையணிந்தாய்
வாமமேகலையார்மயக்கினிலழுந்தாவன்கனைதருடந்துகாவாய்
பூமனும்பொழிலார்சதுரமால்வரையிற்பொருந்தியமாலிங்கநாதா. ௫

வாசவன்றருவாசன்கொடுஞ்சாபந்தீர்ந்திடவருள்புரிந்தாய்
காசினிப்பொற்மேற்கொண்டுமுன்மூன்றுபுரங்களுநீறெழக்காய்ந்தாய்
தேசுயர்விசையன்றனக்குநற்பாசுபதக்கலைசிறப்புறவளித்தாய்
மாசிலாச்சதுரவரைமிசையமரும்வள்ளலேமாலிங்கநாதா ௬

தாருகாவனத்தர்தவஞ்செருக்கைத்தவிர்ப்பதற்குன்னிமாறன்னை
நேரிழையுருவாயேவியாங்கவாநற்றெறியினையகற்றிமற்றவர்தங்
காரிகையார்பானகனுயப்புகுந்துகற்பழிதரப்பினுங்காத்தாய்
சீர்சிறந்தோங்குஞ்சதுரமாலவரையிற்றிகழ்தருமாலிங்கநாதா. ௭

பூவுலகதனிற்பற்பலுளினும்புன்புலைத்தொழில்புரிபவரிடத்து
மாவலாய்நேசித்தெட்டினையெனினுமறிவிலாதிகழ்வினைபுரிந்த
பாவிநானெனினுநின்றிருககருணைபாலித்துக்காப்பதுன்பார
மாவிநாயகனேசதுரமால்வரையிலமர்ந்தருண்மாலிங்கநாதா. ௮

வேனிலைநீரினசையினுனடிவிரிதருகானிடையுழலு
மானெனவுலகவியலெனுமயக்கவாரியிலழுந்துறுதருள்வாய்
தேனினுமினியமொழியுடையுமையாள்தேவியோர்பாகமாய்விளங்க
வானவர்புகழுஞ்சதுரமால்வரையில்வைகியமாலிங்கநாதா. ௯

## வேறு.

ஆனூர்திபொடுயர்கேதனமுடையாயதழுடையாய்
பானேர்மொழிசசியர்செய்மயல்பாறும்படிபாரும்
வானுனிலங்கெடினுமலைவில்லாய்மலைவில்லாய
தேனுர்பொழிற்சதுராசலத்தேவாமகதேவா. ௰

கற்றூரணிந்துரைநூற்கரைகண்டாய்கறைக்கண்டா
முற்றூரணித்தேர்மீப்புரமுனைவாயெந்தன்முனைவா
விற்றூரணிகோளாதனபதிமீதருட்டோழா
மற்றூரணிசதுராசலத்தேவாமகதேவா. ௰௧

அரிமுன்பெறவடலாழியையளித்தாய்துயரழித்தாய்
சரண்சேர்ந்தவர்க்கருளீந்திடச்சடையாய்திகழ்சடையாய்
பரிவானவெண்மதியோய்சிரமபணியுந்துவெண்மதியோய்
திரமேவியசதுராசலத்தேவாமகதேவா. ௧௧

மையாடரவணியாய்திகழ்பரனின்சரணணியா
யையாவிவணடைந்தேனெனையாளாயகிர்பையாளா
மெய்யாரணிநீற்றாய்வீயேவிடும்வேடனைநீற்றாய்
மையார்பொழிற்சதுராசலத்தேவாமகதேவா. ௧௨

விடையார்கொடியானேவிரவலர்க்குங்கொடியானே
நெடியோனுடனயன்தேடுறுநீதாவருணீதா
திடமாயுமையிடமேவியதேகாவுவந்தேகா
மடலார்மலர்சசதுராசலத்தேவாமகதேவா. ௧௩

பொன்னேதிகழொளியேபுகல்புவிவிண்ணகல்வெளியே
தன்னேரிலாவளியேயிருந்தழனின்னுதல்விழியே
யன்னேயுயரளியேயுமையாமாமலரளியே
மன்னேபுகழ்ச்சதுராசலத்தேவாமகதேவா. ௧௪

நந்தாவொளிமதியேதிகழ்நதிக்குமொருபதியே
பந்தார்தனத்துமையன்புறுபதியேயருள்கதியே
யெந்தாயுனைத்துதியேசெயவெற்கீநலமதியே
சேந்தேன்மலிசதுராசலத்தேவாமகதேவா. ௧௫

பணியம்புலிக்கிசைந்தாடியபாதாகுழைக்காதா
பிணையொன்றுகைநாதாவரம்பெருக்கும்வரநீதா
வினையெங்கணும்போதாமெயினெழிலார்ந்தவினோதா
திணிவொன்றியசதுராசலத்தேவாமகதேவா. ௧௬

அணிகொன்றையின்முடியாயெலாமழிவெய்தினுமுடியாய்
கணைதங்கியவிழியார்மயல்களையவருள்விளைய
தணிவின்மறைப்பொருளேயுயர்சரணுயினெற்கருளே
மணிபொங்கொளிசதுராசலத்தேவாமகதேவா. ௧௭

வாராய்வரந்தாராய்மனமகிழ்வாயெனைப்பாராய்
சீராயருள்கூராயுறுசெகமாயையுந்தீராய்
தேராருளஞ்சேராதவசேர்ந்தோர்க்கருள்வீரா
தீராவுயர்சதுராசலத்தேவாமகதேவா. ௧௮

## வேறு.

மாநிலமீதிலுற்றமாமாயையினெய்தினரு
மானுயர்கேதனனேநினதடிக்கன்புறினுங்கரை
யீனமுறும்பவங்களெவையும்விட்டேகுமென்றேமறைக
டானவில்கின்றதுவேசதுர்வரைத்தற்பரமாதேவா. ௧௯

அண்டங்களெண்ணிலவுநிறைவுற்றருவாயுருவாகித்
தெண்டிரைசூழ்புவியிலுயிர்க்கின்பமீபவரெல்லாமாகி
வெண்டலைமாலைபுனைந்திரண்டுவிழிக்கயிற்றாட்டிவைக்குந்
தண்டலைவண்டிசைகொள்சதுர்வரைத்தற்பரமாதேவா. ௨௰

ஒப்பிலாமாமணியேயுயர்சுதோருவத்திருவுவொளியே
யெப்போதுநின்பதமேநதிசெயுமேமையெனையாளாய்
கைப்போதகவுரியோர்த்துயில்கொள்கவரிசங்கரத்திலகச்
சர்ப்பாபரணமுளாய்சதுர்வரைச்சங்கரமாதேவா. ௨௧

அன்னைபிதாகுருவுநீனயான்றிவேறொன்றுமின்றும்
பொன்னிகர்மேனியனேயகத்தைபுபொங்கவெனையாளாய்
முன்னசுரேசர்திரளனைத்துமுருகவூல்வீட்டியரு
டன்னிகரில்லாதசதுர்வரைச்சங்கரமாதேவா. ௨௨

வாசமலரிதழிதொடைபுனைவள்ளலேமெத்தமிழ்தே
பாசமகற்றியெனைநினருட்பார்வைபுரிந்தாளாய்
தேசுயர்வேணியனேநினதுதிருவடிக்கன்புசெய்தேன்
றேசனென்றேயெனையாள்சதுர்வரைச்சங்கரமாதேவா. ௨௩

## வேறு.

பண்டுமாமறைநால்வர்க்கருளியபரமேசா
வண்டறைகுழன்மாதர்மயலகிழ்த்தெனையாளா
யண்டர்கண்முனிவரயனரியறிவரிதாய
தண்டளிர்பொழின்மேவுஞ்சதுர்வரைமாதேவா. ௨௪

பூவையரொடுகிலனற்பொருளொளுநகைமூன்றி
னுவலினுழலாதுன்னடிமலர்நீதாளா
பாவலர்புகழ்ந்தேத்தும்பற்பலவளத்தோடுந்
தாவில்சீர்தழைத்தோங்குஞ்சதுர்வரைமாதேவா. ௨௫

பெண்ணிடத்துறமேலோர்பெண்ணினைத்தலைமேலார்
தண்ணளிமிகுந்தோங்குந்தானுமேயெனையாளா

நண்ணிணையகழ்ந்தியுங்கண்ணப்பர்க்கருணல்குந்
தண்ணுறுஞ்சுனையாருஞ்சதுர்வரைமாதேவா. ௨௬

மூங்கிலினிடைதோன்றிமுன்னமவிண்ணிறைகாத்த
தீங்ககனின்பாதசேவைதந்தெனையாளா
யோங்கறஞ்சான்றன்னையுயர்பொருளெனவுன்னுந்
தாங்கருந்தவர்மேவுஞ்சதுர்வரைமாதேவா. ௨௭

தூதுசுந்தரர்க்காயோர்தோகைநன்னிடஞ்சென்றோய்
பாதகமுதற்றீயபற்றறவெனையாளா
மாதவாரொடுமமைவகியபொழிறோறுந்
தாதலாமலர்தூவுஞ்சதுர்வரைமாதேவா. ௨௮

வேறு

எனவிவைபலவும்புகன்றுநெக்குருகியிருவிழிகளிலுநீர்சொரிய
மனதுடன்பொறிகளியைந்துபாரொடுமுறலுறநிலத்திலேகொன்றையுந்திகழத்
தனதிடப்பாகத்துமையுடன்விடைமேற்சதுர்ப்புயந்துலங்குறத்தோன்
றி,நினதுநெஞ்சகத்திற்கருதியயாதுநிகழ்த்துவாயென்றனனிமலன். ௨௯

மால்விடைப்பாகன்புகன்மொழிகேளாமனமகிழ்சுந்தரமூர்த்தி
சால்புறும்பரத்திற்பிறைனருந்தொழுதுசங்கரசம்புமாதேவா
மேல்வரும்பிறவிப்பாவியிமேதினிநண்ணில்வந்துறினும்
வேல்விழிமடவார்மயக்கநீத்தறன்மெய்விளக்கநல்லருள்புரியெனவே,

சொல்லியமொழிகள்கேட்டுமுவந்துசுந்தரவனக்கொடிபடைத்து
நல்லியலபுடன்பலவூழிகாலமுநின்றுமமுஞ்சீர்த்திநல்லறனு [ர்
மெல்லொளிசெலுத்துமிடனெலாமபரவியிலங்குநின்மரபினிலுதித்தோ
செல்வமேலோங்கிவாழ்வரென்றுரைத்துமறைந்தனன்சிவபெருமானே.

வேறு.

வேதநாயகனுங்குற்றுவிரம்பியதிருவாகக்கேற்றுக்
காதன்மீதுறச்சிரென்கமிந்நரன்படத்தையுன்னிக்
கோதிலாக்குணத்தோரந்தக்குணறினின்றிழிந்தோர்வேணி
மீதுறவிலகித்தோன்றமேதினிதன்னைச்சார்ந்தார். ௩௨

அம்மலையருகிலுள்ளவருந்தவமுதலோர்வந்த
செம்மலைவணங்கியேத்தித்திருமுகநோக்கியெங்கள்
விம்மலைத்தவிர்த்துக்காச்கும்வெள்விடையரனன்பார்ந்த
கைம்மலையனையாயென்னக்கழறினுருவகைமிக்கார். ௩௩

அன்னவர்க்கினியவானவசனங்களைத்துங்கூறிப்
பின்னவர்தமையுமோவிப்பெருகியகருணையோடு
முன்னுயர்சதுரவோங்கற்கேகெனமொழிதல்செய்த
பொன்னவிர்கருப்பன்கோவிற்பூசகனிடத்திற்சார்ந்தார். ௩௪

கண்டகமகிழ்ச்சிபொங்கக்களிவுடனெதிர்சென்றன்ற
தொண்டைவாயுமையினைபாகனாறாமலர்ப்பதத்தின்சேவை
கொண்டனைநின்னைநேர்வார்குவலயத்தெவரேயென்றுந்
தண்டலில்கருணையோடுந்தழுவினனெனையடமாதோ. ௩௫

தழுவினேன்றன்னைத்தானுந்தழுவியுண்மனம்புகூர்ந்து
வழுவிலாக்கிரியினுற்றவாறெல்லாமெழுத்திப்பின்னர்ப்
பழுதிலாப்பூசகன்றன்பால்விடைபெற்றுமீண்டு
குழுவியவனத்துன்பண்ணைக்கூவனபாரகரையுற்றார். ௩௬

அன்னகர்நன்னரிலுள்ளோரனைவருமெதிர்சென்றேத்தி
மின்னவிர்பதந்துநீரால்விளக்கிநன்மலரர்ச்சித்து
மன்னியவன்பினோடுவணங்கலுந்திருவைகூர்ந்து
துன்னியகிளைஞர்சூழத்துலங்கவாண்டடைந்தவேலை. ௩௭

இந்திரன்காதல்கூருமெழிலவாபலவுமெய்துஞ்
சந்தையூர்தன்னின்மேவித்தருமுறையுலகங்காக்கும்
விந்தைசேர்புயக்கூழப்பவேந்தன்றன்னிளைஞரோடும்
வெந்திறற்படைஞரோடுவிருப்புடன்வந்துகண்டான். ௩௮

மணிபொனாலிறைந்தவிஞ்சிவேளோருஞ்சேரையூரி
லணிவருஞ்சீர்த்தியாகவரசாகவொருரும்போற்றத்
துணையறனெனநாடாளுந்தும்பையஞ்சிமிபூமன்
பணையொலிமுழங்கச்சேனைப்பரவையான்வந்துகண்டான். ௩௯

பல்வளஞ்செறிந்திலங்குமபாப்பையாபுரத்தின்மேவி
யெல்லையில்செல்வமுற்றோரியாவருமுவந்துகண்டார்
நல்லறஞ்செழிக்குந்தெய்வநாயகபுரத்திலுள்ளோர்
சொல்லருமகிழ்விற்கண்டார்சுந்தரமூர்த்திதன்னை. ௪௰

இந்தநல்வசனங்கேளாவெழிற்றவம்புரிந்துமீண்ட
சுந்தரமூர்த்திசெய்யதுணைப்பதம்பணியவெண்ணிக்
கந்தமார்பொழில்கள்சூழுங்கற்றூழநகரினின்று
மைந்தருமற்றுளோரும்வரிசையின்வந்துகண்டார். ௪௧



உ

சிவமயம்.

# அன்னதானப் படலம்.



இனிதுறச்சுந்தரமூர்த்திதந்திருவாய்மலர்ந்தருள்செய்யேவலாலே,
நனிபருப்புந்தண்டுலங்காய்வகைகணறுநெய்க்குடங்கள்பாற்குடங்க, டு
னியகற்றுமோர்க்குடங்கடயிர்த்தாழிவெற்றிலைநற் றுவர்க்காய்மிக்க, ப
னிவரைகள்பலவவணிற்படர்ந்ததெனப்பல்பொருளும்பரிவிற்சேர்த்தார்

வேறு.

ஆயகாலையரிசிகழுந்தநீ
ரேயகாலைநிறைவுசெய்தேகியே
தூயசோலைகள்சூழ்வுறும்பண்ணையிற்
பாயுநட்டபயிர்கடழைக்கவே ௨

அட்டினன்மனையார்களெழு தூமமே
விட்டுக்கார்நிறந்தேகுமியலது
வட்டநேமிவரைநின்றெழுந்துவிண்
டொட்டுலாவுறுஞ்சூன்முகில்போலுமே ௩

ஒள்ளிதாகியவோதனக்குப்பல்கள்
வெள்ளிமால்வரையென்னவிளங்குவ
தெள்ளிதானபருப்பிரசஞ்சிறந்
தெள்ளருங்கறியாவுமமைத்தனர் ௪

பாயசத்தொடுபாங்குளபச்சடி
யாயகூட்டுக்கறிகளமைத்தனர்
தூய மாங்காய்த் துவட்டலும் பூசணிக்
காயுங் கத்தரிக் காய்க்கறி செயதனர். ௫

கன்னி யின்னறுங் காயைப் பொறித்தனர்
பின்னும் பற்பல் கறிகளும் பெட்புறக்
கன்ன லொன்றிற் கடிதமைத் தாரந்த
நன்னகர்க்கணறுமணம்வீசவே. ௬

முன்னை நாணள னென்னு முடியுடை
மன்னும் வீமன் மடைத்தொழில் செய்தது
மின்ன வன்ன மவைத்தவர்க் கீடல
வென்ன வுற்றவர் யாவரும் [illegible]றவே. ௭

கண்டு சுந்தர மூர்த்தி களிவுற
வுணடி கொள்பவர் யாவரு முண்கவெண்
றெண்டி சாமுகத் தெங்கணும் கேட்பதாய்க்
கொண்ட னேர்முழ வங்கு மிருக்கென. அ

முரசின் பேரொலி கேட்டலு மொய்சடை
யரன்மெய் யன்ப ரனேகரும வந்தனர்
புரியு மாதவப் புண்ணியர் வந்தன
ரிரவ லோர்கள் பலரும்வந் தெய்தினர். கூ

கண்ணி லார்களுங் காலின முடவரு
முண்ணிகழ்ந்தவு ணர்வறியார்களு
மண்ணின் மேற்றவழ்ந் தேவரு வோர்களு
மெண்ணி லோரயங் கினிதுற வெய்தினா. க0

காது கேட்கி லருங்கையி லோர்களு
மாதுலர்த் தம்பம யாதுமில் லோர்களு
மோதும் வார்த்தையி லூமை யுருப்பிலர்
தீதின் மூப்பின ருமபலர் சோர்ந்தனர் கக

தனது நாயகன் வீந்தவா முன்றரும்
தனைய ரோடவண் சார்குவ ரார்பினு
மனையி லாடவர் மைந்தரைக் கூவிக்கொண்
டினிதின் வைகுதற் கெண்ணியுற் றாரரோ. கஉ

இந்த வாறுபல ருமவந் தெய்தவே
முந்து சுந்தர மூர்த்தியும பார்த்தநற்
சிந்தை யிற்களிப் பாற்றிரு நீறவண
வந்து ளோர்க ளெவர்க்கும் வழங்கியே. கங

வந்த மெய்யடி யார்க்கு வரிசையான்
முந்த வாற்று முறைகள் புரிந்துபின்
னந்தமில்லர னன்பர்க்குப் போககம்
தந்திடும் மெனச் சாற்று மளவினே. கச

வேறு.

அரனடி யவர்கட் காங்க ளாக்கிய வடிசி றன்னைக்
கரமிசைக் கூடை கூடை யாகவே கடிதி னேந்திப்
பரவுறு மடைகண்மீது படைத்துச் சர்க் கரையி னோடு
நிரை நிரையாக வாழைக் கனிகண் மாங்கனி நிறைத்தே. கரு

அப்பழம் வடைகண் மிட்டா யறுசுவைக் கனிக ளோடுஞ்
செப்பரு பருப்பு நெய்யுந் சிற்சிலர் டைக்க லுற்று
ரொப்பிலான் பாறேன் மற்று முதலினர் சிலர்க ளன்பா
லப்பணி சடையோ னன்ப ரகமகிழ்ந் தருந்து மாறே. ௧௬

அனமருந் தினர்க்குப் பின்னு மனமளிப் பார்கள் சில்லோர்
பினும் புளிங் கறியினோடும் பெருகிய தயிரு மோரு
மினிதுற வளிப்பர் சில்லோ ரவரவர்க் கியையுமாறு
கனிவுறு பண்ட மெல்லாங் கனிவுற வளிப்பர் சில்லோர். ௧௭

இட்டவர் தமக்குப் பின்னு மனமிட விரைந்து செல்வோர்
திட்டெனக் கறிகளைக் கசெல்பவர் தயிர்மோ ரீவோர்
முட்டுவர் மூரரோன்ற முடுகுவர் கைமாற் றகற்
தட்டுவ ரனர்த்தை யுண்போர் தமமன முவக்கு மாறே. ௧௮

இன்னணம் படைத்துப் பின்ன ரினிடபா யசமு நல்கிக்
கன்னலின் சாறுமற்றுங் கனிவுட னருந்த வூட்டிப்
பன்னரு முபசாரங்கள் பலபல புரிந்த பின்னர்
நன்னல மாகவன்னோ ரருந்தினன் கமைந்த காலை ௧௯

வேறு.

அரசர்மற்று மவணமை ந்தோர்க்கெலாம்
வரிசையாக வழங்கின ரோதனம்
பரிவுதீரப் பலருமுண் டொன்சுதை
விரவியுண்டவ ரொத்து விளங்கினர். ௨0

அன்னகாலை யநேகம் படையுடன்
சன்ன னேர்கொடைக் காயபூபதி
மன்ன வேமகிழ்வால்வந் தவர்க்கெலா
நன்னலந்தரு மோதன நல்கினர். ௨௧

முல்லை மாநகர்மேவி மனுமுறை
நல்லறத்தொடு நானிலங் காத்தருள்
சொல்லரும் புகழ்ச்சொக்கலிங் கேந்திர
னெல்லையில் படைசூழவந் தெய்தவே. ௨௨

மனதிற்சுந்தர மூர்த்தி மகிழ்வுட
னினிய போனகம் யாருமுண்பீரெனக்
கனிவு டன்வந்த காவலன்சேனையு
நனிமகிழ்ச்சியி னல்விருந் துணடனர். ௨௩

விருந்தருந்தி வியந்துறும் வேளையிற்
பொருந்து நல்வளப் போடி நாயக்கனூர்த்
திருந்துசீர்த்தி யுடைச்செக வேந்தர்கோன்
வருந்தலில்படை யோடும்வந் தெய்தினன் உ௪

சிறந்தமாப்படை சூழச்சேத்தூரில்வா
முறந்தவாமனுமங்குவந்தெய்தலுந்
திறம்மிகுந்தசிவகிரியனயமா
பெறும்படைத்திரட்பெட்புடனெய்தினன். உ௫

பார்த்துசுந்தரமூர்த்திபரிவுட
னீர்த்தவேணிமனைநெஞ்சகந்
சோத்தியேதிருநீற்றினைத்தூவிய
மாத்திரந்தில்வளர்ந்தனவோதனம். உ௬

வந்தவேந்தர்க்கும்மாப்படைவீரர்க்கும்
பந்திபந்தியிற்போநகம்பாங்குடன்
றந்தகாலையினும்மனந்தாழ்விலா
துந்திமேலுயர்ந் தோங்கியதாமரோ. உ௭

நாட்டுள்ளோருநகரிலுள்ளோர்களு
மாட்டிற்பற்பலகருணைமாந்தரு
மீட்டுமீட்டும்விரும்பிவந்தோர்களும்
வாட்டந்தீரவமுதினைமாந்தினர் உ௮

பின்னுமன்னநற்பெற்றியிதேநன
மன்னும்வெள்ளிமலையிற்கராகவே
துன்னுகின்றதுகண்டுதொன்னீதியார்
மன்னர்பின்னைவருமகிழ்வெய்தியே. உ௯

இனையவாச்சரியமமெந்நாளினுங்
கனைகடற்புவிமீதினுங்கண்டில
முனைநிகழ்ந்ததெனமொழிந்தாரிலை
யெனமகிழ்ந்திவையீசன்செயல்கொலோ. ௩0

நவிலுங்காலையினாட்டுப்புறத்துளார்
குவிதலாயந்தக்கோநகரெய்தலு
மிவர்கட்கன்னமினிதளிமின்னென
நவையிலோதனமியாவர்க்குநல்கினர். ௩௧

தேவபோனகந்தேக்கவுண்டாரென
யாவருங்களிப்பெய்திநல்லன்புடன்
றாவரும்புகழ்ச்சுந்தரமூர்த்திதம்
மேவருங்கழல்போற்றிவிளம்புவார். ௧௨

வேறு.

நன்றினிக்கோவிற்கென்று நவிலுநெற்பண்டியீர்த்துச்
சென்றுறுமெருதுசெந்நெற்றிரவியமுதலவாய
குன்றலில்பொருள்கட்கியாங்கள்கூறருங்காவலாக
வென்றும்வாழ்வுறுவோம்வேறென்னெண்ணுவதில்லையென்றார். ௧௩

போனகமுண்டோர்க்கெல்லாம்புனைநறும் கலவைச்சந்த
மேனலமாகத்தந்துமென்மலர்ச்சரங்களீந்தே
யானவெள்ளிலைபடைக்காயன்புடனருளலோடிந்
தானலமாகவாங்கட்சகலருமினிதுபெற்றார். ௧௪

அருந்தவர்முதலோர்க்கெல்லாமாடையாபரணத்தோடுந்
திருந்துபல்பொருளுமன்னோர்நிறையவீங்களிக்குமாறு
வருந்தலின்மனத்தினேடிம்வறங்கினன்புவிக்குவந்து
கருந்தடமுகில்களொன்றுங்களிவுறப்பொழியுமாறே. ௧௫

இடைகடைமுதலென்றேதுமெழில்மிகும்வள்ளலானோர்
படியிலையிணையவாறுபகரநம்புரிந்தாரில்லை
துடியிடையுமையாள்பாகனன்புறுந்தொண்டரன்னக்
கொடைநிகரியற்றவோரிக்குவலயத்தெவரேயென்ன. ௧௬

தன்னிகரில்லாவென்றித்தும்பைபசாமியன்பாற்
பொன்னவிரரிமுகத்துத்தண்டிகையுடன்பல்பொன்னும்
பன்னலவிளைவுமோங்கும்பூமிநற்பண்ணையெல்லா
மன்னவர்மன்னன்சீர்த்திவளரச்சுந்தரர்க்குத்தந்தான். ௧௭

வம்பவிழ்மாலைவேயுமார்பினன்பினுங்கூடேந்திர
நம்பரனருள்பெற்றேங்குநல்லசுந்தரமூர்த்திக்குச்
செம்பொனற்குடைசுருட்டிசேர்ந்துறுபொருள்களியாவு
மும்பரும்வியப்பதாகவுதவினனென்பமாதோ ௧௮

மண்டலம்புகழ்சாப்பிட்டேமருவுங்காமயமகீபன்
விண்டலம்விளககுமீன்களெனமிளிர்முத்துமாலை
தண்டலிலணிகன்மற்றுஞ்சாற்றுதற்கரியபொன்னுங்
கொண்டனோர்கரத்துவள்ளல்கொடுத்தனனென்பமாதோ. ௧௯

மருவலர்தம்மைவென்றுமநுமுறைசெங்கோலோச்சிப்
பரிசனத்துடனேமுல்லைபதியமர்வேந்தன்பார்த்து
சரிகைசேர்ந்திலங்கும்பட்டுவெத்திரஞ்சகலமான
வரிசைசுந்தரமூர்த்திக்குமகிழ்ந்தினிதளிப்பதானான். ௬0

மற்றுளவேந்தரியாருமவரவர்மனத்திலன்பா
லுற்றபல்பொருள்களெல்லாமுதவினர்செல்வமோங்குங்
குற்றமின்மனைநல்வாழ்க்கைகொண்டவர்மனத்திலன்பு
பற்றசுந்தரமூர்த்திக்குப்பலபல்காணிக்கையீந்தார். ௬க

இனையனசிகழுங்காலையெழின்மிகும்மேனையூர்வாழ்
தனைநிகரில்லாச்சீர்த்திதழைக்குந்துப்பையசாமி
கனைகழலரசர்மற்றேரியாவருங்கனிந்துகேட்ப
மனதினிற்கருணைபொங்கிமகிழ்ந்திவையுரைப்பதானான். ௬உ

இவ்வறமெந்தநாளுந்தவறிதுறவலர்வதாகச
செவ்வியவருடந்தோறும்வருந்திரைப்பொருளிற்காற்பங்
கெவ்வமின்றுகநாளுமீதுமென்றுரைக்கமற்றோ
ரவ்வகையாகயாமுமளித்துமென்றுரைப்பதானார். ௬௩

மற்றுளோரெவருந்தங்கண்மனத்திடையுவகைகூர்ந்து
பற்றுடன்யாங்களாற்றும்பயிர்த்தொழில்விளைவுதன்னிற்
குற்றமிலறத்திற்கைந்திலொருபங்குகொடுப்போமென்று
வெற்றிசேர்வணிகர்மற்றோரம்முறைவிளம்பினாரே. ௬௪

ஆயவைபுகன்றெல்லோருமகத்திடைமகிழ்ச்சிபொங்க
மாயைதீர்சுந்தரேசர்மலர்ப்பதம்பணிந்துபோற்றித்
தூயமாதவர்களீசன்றொண்டர்கடுகடீரன்பர்
மேயமெய்யடியரோடும்விருப்புடனுறைவதானார். ௬௫

அன்னதானப்படல முற்றிற்று.

ஆக படலம்-கசுஎ-க்கு திருவிருத்தம்-அசுய.



உ

சிவமயம்.

# பரிகலப்பிரசாதமகிமைப்படலம்.

——(*)(*)(*)(*)——

காருவந்துபல்லுயிர்க்குநற்குமாரனுகருணைகொள்சுந்தரமூர்த்திகனிந்தவன்பா, னீருலவுகடலாடையுலகுளோர்க்கு நனைவுறவேயனமருளி மகிழுங்காலைச், சீருயர்கட்டிக்குளத்திராமலிங்க தேசிகராங்கெய்துதலுஞ்சிறப்பான்மிக்க, தாருலவுமேவர்தம்முதலெவருமேத்தித்தாடொழுதோராசனத்திற்சார்வித்தாரே. ௧

அந்தவாதனத்தின்மிசையிருந்து செய்யவருந்தவர்சுந்தரமூர்த்திவதனநோக்கிச், சிந்தைமகிழ்வார்சதுரவரையினெய்திந்திரும்பியவாறனைத்தையுநீசெப்புகென்னச், சுந்தரமூர்த்தியுமவரைவணங்கியந்தத்தொலைவரையினிகழ்ந்தனமற்றனைத்துஞ்சொல்லப், பந்தமறுமுனிவர்மிகு மகிழ்ச்சியெய்திப்பாரோர்வேந்தாமுதலெவர்க்குமுபகாரவதானும். ௨

இன்னணஞ்சுந்தரமூர்த்தியன்பினெண்ணடியருறுமனதானத்தினன்மைபெற்றீர், ஙனலமுற்றோர்பவங்களைத்துப்பதீர்ந்தீர்நானிலத்திலுமக்கிணையார்நவிலுங்காலை, யன்னதினுமதிகபலனுய்த்திடக்கேய்ந்ததரனடியர்பரிகலத்தின்மிச்சிலொரு, முன்னுங்குமரியகுட்டமுடலெண்குற்றமுற்றவருமருந்திலகன்றுயாவதாமால். ௩

ஆயபலபாதகமுமகலுமென்னுவரனுமைக்குக்கூறியதையறைதுநீவிர், தூயமனத்துடனிருந்துகேண்மினமேருட்டுலங்கியுயர்காந்திருவர்க்கேந்தலான, தேய்விலபுகழுகுவென்பான்மகிழ்வாலெந்ததேயத்தினதிசெயமுந்தெரிவானுன்னி, யோயவிலகதிப்புட்பகவிமானத்தேறியுயர்ந்தவொருவரையின்மிசையுற்றகாலை. ௪

வேறு.

அம்மாமலைமீதிலமர்ந்தருள்வோன்
செம்மான்கரத்தேந்தியதேவதொழு
மெம்மான்மகிழ்பூசையியற்றுதல்செய்
மெய்ம்மாதவனவ்விடைமேவுதலும். ௫

அவன்மேவியகந்திருவாக்கரசன்
றவன்மேனியெழில்கண்டுதன்மனதி
லிவன்போல்பவரெவ்வுலகத்துமிலர்
சிவனேயிவனென்றுதன்சிந்தைகொளா. ௬

அன்போடவருந்தவன்றளின்மிசை
துன்போடப்பணிந்துதுதித்துவிண்ணோ
ரென்போடரவம்புனையீசனைமிக்
கின்போடிதயத்திலிருத்தியநீ. ௭

மின்னார்திருமேனிகொளெம்பெருமான்
றன்னாருண்மேவுதவத்துளவா
வென்னாவிவணுற்றதெனக்கிசையா
யென்னாமகிழ்வெய்தியவன்புகல்வான். ௮

இவண்மேவியநன்மையியம்புதுங்கேள்
பவநாசனெனுமறைநூல்பகருஞ்
சிவனிவ்வரைமேற்றிருலிங்கமதாய்
நவையின்றியெந்நாளுமிருப்பதுவே. ௯

முன்னாட்புரமூன்றெரிசெய்தபிரான்
றன்னாற்புரிதன்மைகள்யாவையுமே
யென்னாற்புகலற்கெளிதன்றெனினுந்
தொன்னாணிகழ்வுற்றமைசொல்லுதுங்கேள். ௰

மேனாளவன்செய்வினையின்வலியாற்
கூனாயுடற்குட்டமிகுந்துளதா
யூனாறியபுண்ணொடுகண்ணிலதாய்த்
தானாயுழல்வானித்தரணியினே. ௧௧

விரதன்னெனுநாமங்கொள்வேதியனோ
கரமின்றிக்கலிக்கோரிருக்கையதா
யொருநாறிகழ்வுகொளூனுமுடையான்
றிருவில்லவனிவ்வரைசேர்ந்தனனே. ௧௨

இவனெய்தியிருப்பதுணர்ந்திலனோர்
நவைநீங்கியகின்னரனின்னகமவாழ்
சிவனன்புறத்தீஞ்சுவையோதனமாங்
கவனைவேதனம்புரிந்தானபினே. ௧௩

வேறு.

நந்தமீசனறனக்குநன்காற்றிய
வந்தநற்பிரசாதமருந்தியே
சிந்தையன்பிற்பரிகலசேடத்தை
யிந்தநலவரைமீதெறிந்தேகினன். ௧௪

அந்தக்கன்னித்தளிரவனெய்திய
வந்தணாளன்றனக்கயல்வீழ்தலு
மூந்தும்வெம்பசியாலுளம்வாடிமெய்
நொந்துளான்செவியாலுற்றுநோக்கியே. ௧௫

ஒருகையாலவனுற்றுத்தடவிநற்
பரிகலத்தைப்பரிந்துகொண்டானமுகம
தரியநன்மணங்கண்டுசுவைநத்தின
வருநறுஞ்சுவைபார்த்துடன்மாந்தினன். ௧௬

அன்னகன்னிதசளிரினைப்பியத்தங்ஙன
மின்னவேசெய்நதீவினையோடவன்
மன்னும்வெம்பசிநீரதுமகிழ்ந்தன
வின்னலசசுதையுணடவரெனவே. ௧௭

பொருந்துமுன்பிணியாவும்பறந்தசெல
வருநதுமேப்புறைதிறைமாறவே
திருந்துகண்ணொளிமிகவெனத்தோன்றவாங்
கிருந்தனனல்லிளமையுமெய்தியே ௧௮

இன்னவாயவெழிலுருவெய்துக
கென்னமாதவமயாமபுரிந்தோமெனை
வுன்னியேயிவனுற்றுயர்கோவிலினை
மன்னியீசனமலரடிபோற்றியே ௧௯

மலைவிலோன்றன்மலரடிககன்பனுண
ணிலைகொலாசமக்கிவ்வுருவுய்த்ததென்
றலகிலாமகிழ்வெய்தியகனறுநீ
ளிலைகொளோர்மரத்தினமருங்கெயதினன். ௨0

பின்னுமன்னபெருந்தவனுசசியிற்
பன்னருங்கதிரப்பாநுவநடெய்தலுங்
கன்னலின்சொலிபாகன்கனிவுற
வன்னனைவேதித்தாங்கவனுண்டரோ. ௨௧

பரிகலத்தினைப்பக்கத்துவீசலு
மரியவேதியனங்குற்றுநோக்கியே
விரைவினெய்திவிரும்பியருந்திநற்
பொருவிலாவுயர்பொன்வடிவாகினன். ௨௨

## வேறு.

கன்னல்விற்கொண்டதனெனக்கவினகொள்வேதியன்றனைக்
கின்னரன்பரிந்துநோக்கிக்கேடிலாத்தவத்துளோய
யென்னகாரியத்தினிங்ஙனெய்தினனெனமனத்
துன்னியன்னவன்மருங்கினுற்றுநின்றபோதின்வாய். உ௩

வந்துநின்றகின்னரண்மலர்ப்பதந்தின்முட்டியுறச்
சிந்தையன்புகொண்டுபோற்றிநின்றவேதசுளான்றனைப்
பந்தமற்றவிவனுமன்புபற்றநோக்கியையநீ
ரெந்தநாடிங்குற்றதன்மைபாதுகூறுமென்னவே. உ௪

ஐயவெற்கோர்நாடுமென்றியாகமெங்குங்குட்டமா
யுய்யவேதும்வழியிலேனவேறென்றுநோக்கவிழியிலேன்
செய்யுமாறுமுணாகிலேன்முன்செயதசெய்யவினையினாற்
பையவேகியுந்தவர்ந்தும்படர்வரைக்கணெய்தினேன். உ௫

இந்தமால்வரைக்கணுற்றவீசன்பூசைசெயதநீர்
முந்தவீசும்பரிகலத்தின்மூழ்மெந்தனபவமெலாஞ்
சிந்தியிந்தவாறுமேனிதிகழவெயதினேனெனு
வந்தவார்த்தைகேட்டகமகிழ்ந்துபின்னரறைகுவான். உ௬

ஓங்குசைவர்பரிகலம்பெற்றோர்க்குவிணணோருறையுளுந்
தீங்ககற்றிமேவுமென்றுசெப்புநாலுவேதமும்
பாங்குடன்றநெஞ்சிலன்புபற்றவன்னோர்ப்பணிகுவோர்
நீங்கரும்பதத்திலுற்றுநீடுவாழ்வரென்பரால். உ௭

## வேறு.

ஆதலாலீசனன்றொண்டர்பெருமையாரறிநதுசொல்வார்
வேதங்கள்விதித்தற்கில்லைவிண்டுவுமுணரற்பாற்றே
சீதமாமதியஞ்சூடுஞ்சிவனறிவானேவன்றே
வோதுதற்கெளியவன்றாலறிந்தவாறுரைப்பக்கேளும். உ௮

ஆணவநீத்தவன்பர்சன்னிதியடையப்பெற்றோர்
பூணரும்பவங்கடீர்ந்துபுண்ணியராகவாழ்ந்து
வேணசித்திகளுமபெற்றுவிண்ணவரெதிர்சென்றேத்தக்
காணருங்கதியிற்சேர்வர்பின்னுநாங்கழறக்கேண்மோ. உ௯

தொண்டர்தமமுருவேயீசன்றுகளறுவடிவமாகும்
விண்டவெவ்வினையோர்மற்றோர்மெய்யினைக்கையாற்றீண்டிற்

றண்டலில்பாவமுஞ்செனமசாகரந்தனையுநீந்தி
யண்டர்கடமக்குமேலாயமர்வரென்றுரைக்கும்வேதம். ௩0

அண்ணலார்மகிமைதன்னோடன்பர்கள்பெருமையெல்லாம்
பண்ணுயர்வேதநான்கும்பகர்வதற்கரியவாகு
நண்ணருங்கல்விதேர்ந்தநாவிரண்டாயிரத்துத்
திண்ணருஞ்சேரனந்தனுலுஞ்செப்புதற்கியலாதன்றே. ௩க

எங்கணும்புகழ்பெற்றோங்குமீசன்மெய்யடியராவோர்
பங்கமின்மேவிதன்னைப்பரிக்கவேண்டாமன்றோர்
செங்கைகள்வீரியாண்டுஞ்செல்லுறுங்காலையாக்கை
தங்குகாலடைப்பெற்றோர்கள்பவமெலாந்தவிருமன்றே. ௩௨

வேறு.

இன்னனவாகமுன்னிகழ்ந்தவின்கதை
யுன்னருந்தவத்சிர்ராமுரைத்ததும்வேடர்கண்
மன்னியமரபினன்புரிந்தமாபவந்
தன்னையிவ்வாறெனச்சாற்றலாவதோ. ௩௩

அனையவனொருபகலடவியெய்திதன்
முனைவருமையிரைமொய்ம்பினால்வதைத்
தினியகூவிளநிழலெய்தலுற்றனன்
றினகரனுச்சியிற்சேருங்காலையே. ௩ச

கூவிளநிழலிடையிருந்தவேடர்கோ
னுவலாயிவ்விடையரியநண்புனன்
மேவவோர்தடம்வெருவிரைவினெற்றுமென்
றேவலாளருக்குரைத்தேகினனரோ. ௩௫

மன்னவன்கூறியமாற்றங்கேட்டவண்
தன்னிகரில்லவேதார்தமுண்டாக்கினர்
பின்னருஞ்சிலதுநாட்கழித்தபின்றையோர்
நன்னலத்தவத்துளானவணிமண்ணினன். ௩௬

வெய்யலிற்சென்றுளம்வருந்திவேர்வெழு
மெய்யினனறும்புனல்விரும்பித்துய்த்துப்பின்
மையகன்றொளிர்வில்வமரத்தினீழலிற்
றுய்யவன்மகிழ்வொடுதுலங்கும்போதினே. ௩௭

வேடர்கட்கரசனும்வேட்டையாடியக்
காடெலாமலைந்துதண்ணீரின்காதலா

லோடிவந்தத்தடத்துதகமுண்டதன்
மாடுறுவில்வமாநிழற்குவந்தனன். கரு

அத்தவத்துயர்ந்தவனருகினையதனு
மெய்த்தவன்மேற்படுகாற்றில்வேடர்கோன்
மித்தையாமுடலிடைகழுவவெமபவ
மத்திகள்போலவெந்தயலின்வீழ்ந்தவே. கசு

கண்டனன்வேடர்கட்கிறைவன்கண்களாற்
றண்டலிலிவன்பெருந்தவனென்றுன்னியே
தொண்டனுனகனெனத்தொழுதகாலையி
லண்டருமகிழ்தவனறைகின்றனரோ. சஎ

முனனாநீபுண்ணிய முயன்றதன்மையா
லின்னகூவிாநிழலெய்தப்பெற்றனை
யுனனுமிவவிலையினீரோாதுளிப்பெறின்
மன்னியபாவங்களகோடிமாயுமே. சக

இனையவிலவந்துறுமிலைகணமூன்றுமே
வினையகளீசசுரன்விழிகண்மூன்றெனறு
மனையதுவேயரனுருவமமென்றுந்
தனைநிகரிறிலாமறைகளசாற்றுமால் சஉ

இம்மரத்தொருவருக்கனனமீந்திடல்
வெம்மைதீரதரவெகுகோடிபோக்கனந்
செமமையினுதவியபலனசிறப்புறு
மெய்மமுறையியற்றெனவிாமபியேகினன். சங

தவனுரைமுறைப்படிதனதுசிநதையி
லவமகனறிடவனதானமாற்றியே
நவையகல்சுற்றமுநன்குசூழ்வரச
சிவன்மலர்ப்பதத்திடைசோந்துளானெனு. சச

வே று.

நான்மறையுணருவோர்தநற்குலத்துதித்தோன்கேட்ப
மேனலமானகின்னராதிபனவிரித்தவெல்லாந்
தானுயர்சைவனூருதனக்குரைத்தானென்றீசன்
றேன்மொழியுமைக்குமேனாள்செப்பியவுண்மைகண்டீர். சரு

என்றிவையனைத்துங்கூறியிராமலிங்கையரேக
நன்றெனவுவந்தெல்லோருநனிமகிழ்ந்திருக்குங்காலை

யொன்றியநோயாசெய்யவுருப்பிழந்தவர்களெல்லாஞ்
சென்றுமேலவர்கணீத்தபரிகலஞ்சிறப்பினேற்றூர். ௪௬

ஏற்றவையருந்தித்தம்பாலிருங்குறையனைத்துநீங்கி
மேற்றிகழ்வடிவத்தோடுவிளங்கியசெயலைநோக்கி
நாற்றிசையிருந்துற்றோருநம்பரனடியார்பாதம்
போற்றிசெயதிவர்கண்மேன்மைபுகலுதற்கரிதாமென்றே. ௪௭

சுந்தரமூர்த்திசெய்யதுணைமலர்ப்பதங்கள்போற்றி
வந்தவரெவருந்தங்கண்மாநகர்க்கேகப்பின்னர்ச்
சிந்தையின்மகிழ்வுபொங்கத்தினந்தினமவருவோர்க்கெல்லா
நந்தலிலன்னதானநன்குறவியற்றினாரால். ௪௮

இனையனநிகழுநாளிலிலங்குஞ்சுந்தரரன்பாரந்து
மனையறம்வளர்க்குமாற்றன்மாநிலத்துறைவோர்க்கெல்லாந்
துனியகல்கருணைநல்கத்தொல்புவிவலமதாகப்
புனைநலத்துடனேவந்தசெயலினைப்புகலலுற்றும். ௪௯

பரிகலபிரசாதமகிமைப்படல-முற்றிற்று.

——(✱)(✱)(✱)(✱)——

ஆ படலம் கள க்கு திருவிருத்தம் - ௮௮௯.

## புவிவலஞ்செய்தபடலம்.

அத்திருநகரின்கீழ்பாலழகியகோவிலாற்றிப்
புத்திரருடனுமிக்கபுகழ்பெறுங்கிளைஞர்பின்னு
மித்திரராகியுள்ளோர்மேவுறமேவுவோர்க்கு
நித்தியமன்னதானநிகழ்வுறவருளிச்செய்தே. ௧

கேசரிமுகத்தையுற்றகிளரொளிமானமூர்ந்து
மாசில்சாமரைசுருட்டியாதியவரிசைசூழப்
பேசரும்பல்லியங்கள்பிரளயங்கூடுநாளில்
வீசுறுதிரையாரார்பியொலியெனமுழக்கம்விம்ம. ௨

பரிசனஞ்சூழ்ந்துசெல்லப்பாவையர்பல்லாண்டோதப்
பிரிவினெற்பொதிகடாங்கற்கியைந்தபண்டிகள்பின்போதத்
திருவுறைமார்பனுங்கட்டிகழுங்கோவிந்தநல்லூர்க்
கருமையினெய்துந்தன்மையறிந்தகமகிழ்வுபொங்க ௩

சகலசெல்வமுமுற்றோங்குநாண்டவராயபூமன்
முகவுடனெதிர்சென்றேத்தித் தாளிணைபணிந்துசெய்ய
முகமன்செய்தழைத்தின்மேவிமொய்மலரமளிமீதின்
மகிழ்வுடனிருத்திப்பின்னர்வழங்கினனன்விருந்துமன்றோ. ௪

சுந்தரமூர்த்திபக்கற்றன்னினைரெவருமாங்க
ணந்தரநாட்டிலுள்ளவமிர்துண்டுகளித்தார்மானச்
சிந்தையின்மகிழ்ச்சிகூரந்திகழனமருத்திப்பின்னர்ச்
சந்தொடுமலர்தாம்பூலஞ்சகலர்க்குமகிழ்வினல்கி. ௫

ஒருபத்துக்கோட்டைநெல்லுமுபசெருந்திரண்டும்பொன்னுந்
தருநிகர்கரத்துவள்ளறுண்டவராயனல்கப்
பரிவுடனேற்றுமற்றோர்காணிக்கைபலவுங்கொண்டு
திருமலிநகரினுள்ளோர்யாவர்க்குந்திருநீறீந்தே. ௬

சுந்தரமூர்த்தியேகத்துங்கியநெறியின்வாழ்வோர்
சிந்தையினுவந்துமிக்கவிறப்புடனெதிர்சென்றேத்தித்
தந்தமக்கியையுமானகாணிக்கைதகவினாலக
நந்தலிறவத்தின்மிக்கோர்நனிமகிழ்வுடனேகொண்டு. ௭

கண்டவரெவரும்போற்றிக்களிசிறந்தெக்கட்டனகணல்கக்
கொண்டகமகிழ்வின்மீனுறவிகைவளர்கூடமெய்தி
யண்டர்கண்மகிழுஞ்சொக்கலிங்கரங்கயற்கண்ணம்மை
தண்டலில்பதங்கள்போற்றிநற்குங்கொடிப்பொழிலிற்சார்ந்தே. ௮

ஓதனமமைத்துவந்தோர்யாவர்க்குமுடனவரோடு
மாதவத்தினர்மற்றுள்ளோரெவர்களுமினிதின்மாந்திக்
காதன்மீதுறவன்புகனிந்தவணிருக்குங்காலை
சோதனைதெரியக்கானன்றொல்படைத்திரளோடுற்றே. ௯

சுந்தரமூர்த்திதன்னைநோக்கியேசொல்வானிங்கு
வந்தவர்தங்கட்கெல்லாமனமகிழ்ந்தன்னதானந்
தந்தருளுதிரென்றன்பார்சார்ந்தனம்யாங்களுண்ணப்
பந்திவைத்தினிதின்னம்படையுமென்றுரைக்குங்காலை. ௰

சிவபரஞ்சுடரைநெஞ்சிற்றுதித்துநற்றிருநீறள்ளி
நவையகலோதனத்தினல்கிவந்தவர்கட்கெல்லா
மிவைநிகரென்றுங்காண்டற்கரிதெனவினிதினல்க
வவர்களெல்லோருந்தேவவமிர்துண்டுகளித்தாரொத்தார். ௧௧

இனையபோகங்கண்மாந்தியின்பமெய்தியவெல்லோர்க்கும்
புனைநறுமாலைசந்தம்பொருவிறுமபூவைநல்க
வனையகான்சாய்புநோக்கியகத்தினின்மகிழ்ந்துபோற்றி
வினையறுதவத்தோர்க்காண்டுவேண்டுவவருளினானால். ௧௨

மற்றுளோரெவருந்தங்கண்மனங்களிகூரியைந்தவாறே
நெற்பொதியொடுபல்பொன்னுநிரைநிரைதருதலோடும்
வெற்றிகொள்சுந்தரேசர்விருப்புடனனைத்தும்பெற்று
நற்றவரறிஞர்சூழாலயத்துட்டிருக்குங்காலை. ௧௩

வேறு.

வங்கர்சிங்களர்குருகர்சீனர்மராடர்முச்சலரொட்டியர்
கொங்கர்கோசலர்குடகர்குந்தளர்கூடர்சாளர்கேகயர்கேரள
ரங்கராந்திரர்துளுநவர்சோனகர்யவனர்கன்னடர்மாளவர்
சிங்கமன்னவர்யாவருந்திறைதந்திறைஞ்சியசெப்பமர். ௧௪

பரிகரிப்படைபொறியெனப்புகல்சதுவிதப்படைபலவுமா
னரன்விருப்புடனுறைதிருப்பதியுடனருட்புவிகாவலன
மருவலர்க்கரியேறனையானமனனெனத்திகழ்வழுவுமாமனா
பரிவுறப்பலகலைகள்கற்றுயர்பருணிதர்க்குயர்தாயனான். ௧௫

இடிகிடென்றுலகதிர்வுறும்படிகிளர்மணிப்பொறிகடவுவோன்
திடுதிடென்னவுகாந்தவாரிமுழக்கின்மேற்றிகழ்முரசினான்
றடுதடென்றுகுரங்களோதைதயங்குவெம்பரிகடவுவோன்
முடிபுனைந்துயர்வாரிசூழ்புவிமுழுதுமாண்மனமன்னவன். ௧௬

புனைநலங்கொளிராமநாதபுரத்தின்மேவுபுரந்தரன்
றனைநிகர்த்ததிடங்கொள்சேதுபதிக்குமற்றிவைசாற்றலு
மனையசுந்தரமூர்த்திதன்னையழைத்திவண்வருவீரென
வினையநற்றிருமனுவுடன்சிலதூதர்தம்மையுமேவவே. ௧௭

வேறு.

வந்துதூதர்வணங்கிநற்சுந்தரர்
சிந்தையுட்களிப்பெய்தத்திருமனுத்
தந்தபோதவையோர்ந்துத்தயையுடன்
முந்துளோர்க்குமுகமன்கள்கூறியே. ௧௮

மதுரைமாநகர்மேவியமாந்தர்கள்
சதுருடன்வந்துதாடொழுவார்த்தி

பதியைபோவிப்படர்செறியுற்றுளோர்
கதுமெனத்தொடர்ந்தேகழல்போற்றலும். ௧௯

சிந்தையிற்களிவாற்றிருநீற்றினைத்
தந்துமிக்கதயையுடன்வாழ்த்தியே
வந்துமன்னகரத்தினமருக்குற
முந்துதூதரிவைமொழிந்தாரரோ. ௨௰

சேதுபூபதிகேட்டுத்திகழ்கய
மீதினுற்றுமிகும்படைசூழ்வர
மோதுமபலவியம்யாவுமுழங்காற்
காதலோடெதிர்சென்றுகண்டானரோ. ௨௧

கண்டுபோற்றிக்களிவுறுமன்பினுற்
கொண்டுதன்னுயர்கோமனையெய்தியே
பண்டருமகிழ்வாசனத்தேற்றுவித்
துண்டிமற்றுவுவந்தருள்செய்தரோ. ௨௨

அரிமுகத்தவிசிகையணிகளும
பரிகளுமதிநுரிமபொன்னுநல்
விரிமணிச்சுடர்வெண்முத்துமாலையும
பரிவுடனபலபாணடிலுநல்கவே ௨௩

இனிதுவாதனைவேற்றுயாசுந்தரர்
கனிவின்வாழ்த்திக்கடிநகமாந்தர்க
ளனைவருமவற்கடித்துவாழ்த்தவு
மனமகிழ்ந்தவர்க்காவிடைவாங்கியே. ௨௪

முன்னுறுநகிளையானவர்மொய்ம்புடன்
மன்னிவாழும்வளநகரெங்கணுந்
துன்னுமற்குணிசுந்தரரன்பினு
னனைலப்படைசூழ்வரநாடியே. ௨௫

முரசுகாகளமெங்குமுழங்கொலி
விரவக்கேட்டவர்மெய்புளகெய்தாற
பரிவிற்சுந்தரர்பாதங்கள்போற்றிசெய
தருளுடன்விடைபெற்றகன்றாரரோ. ௨௬

ஆயகாலையிலாற்றங்கரைப்பதி
மேயசெத்தணபூபதிமெய்யுறை

கூயினனெனத்தூதுவர்கூறலுந்
தேய்வில்சீர்த்தியுளோரங்குசெல்லவே. உ௭

வேறு.

சுந்தரமூர்த்திவந்தாரெனுமுரைசொல்லக்கேட்டுச
சிந்தையின்மகிழ்ச்சிகூர்ந்துசென்றெதிர்கண்டுபோற்றி
யிந்திராலயத்துக்கொப்பாயிலங்குங்கோமனையினுய்த்து
வந்தவர்தங்கட்கெல்லாமகிழ்வுடன்விருந்துசெய்து. உ௮

வேண்டியபொருள்களெல்லாம்விருப்புடன்கொடுக்கவேற்றுக்
காண்டகுமேனிவள்ளல்களிப்புடனிருக்குங்காலை
யீண்டியபுகழான்மிக்கவிளைசைமாநகரையாளுந்
தூண்டருவிளக்கயன்றனேவியதூதர்வந்தார். உ௯

தூதர்வந்துரைத்தமாற்றஞ்சுந்தரமூர்த்திகேட்டு
மீதுறுகாதலோடுமேவினர்ககாசிகூறித்
தாதகுதுக்கும்வெற்றித்தாமபூனெர்தருமொட்டேட்த்ர
ஞதரவாகவைகும்பதிக்கருகமருங்காலை ௩௰

வேந்தர்கள்புகழுமவேர்தன்பரிவுடைவீரர்சூழ
வார்ந்தபல்லியங்களோங்கவன்புடனெதிர்சென்றேத்தி
யேந்தலேயிஞ்சிசூழுமெழின்மனையினிலுய்த்தாங்கட்
சேர்ந்தவர்தங்கட்கெல்லாஞ்சிறப்புடனசனமீந்தே. ௩௧

நித்திலவடமும்பின்னுநிகழ்த்தரும்பொருள்கள்யாவுஞ்
சித்தமிக்குவந்துநல்கத்திருவுளமகிழ்வினேற்றுப்
பத்தியிற்பணிந்தோர்கள்கெல்லாம்பரிவுடனுசிகூறி
யத்திருநகரைநீங்கியருளொடுசெல்லுங்காலை. ௩௨

சிவஞானபுரத்துமாங்கட்சேர்கிராமங்கடோறுந்
தவநெறிச்சுந்தரேசர்தனியுறம்வளர்க்கநல்குந்
தவசங்களனைத்துமவ்வூர்தனிற்களஞ்சியங்கள்சேர்த்துப்
புவியிடைப்புகழ்சேர்வீரபாண்டியபுரத்திலுற்றார். ௩௩

அன்னகர்தன்னிலுள்ளோர்க்கருளுடன்வெண்ணணீறீந்து
தன்னிகரில்லாதோங்குஞ்சங்கிரகிரியுமற்றும்
பன்னகர்களிற்சேர்ந்துற்றோர்பலர்க்குநல்லருணீறீந்து
நன்னலக்கிளைஞர்மேவுநகர்தொறும்பரிவிற்சென்றே. ௩௪

அகிலாண்டபுரத்துமாங்கண்டுத்துளநகர்கடோறும்
புகழ்மிகுவள்ளலெய்தப்போற்றிமற்றவர்களெல்லா
மகமகிழ்வுடனேநல்குங்காணிக்கைபருளினேற்றுத்
தகவுடனவர்கட்கெல்லாந்தகுமுறைவெண்ணீந்தே. ௩௫

பாஞ்சாலநகரில்வீரபாண்டியனெதிர்சென்றேத்தத்
தாஞ்சால்பினெய்திமிக்கதையுடன்வெணணீந்து
தேஞ்சாலியுகுக்குந்தாலஞ்செறிவளநாட்டையாளு
மாஞ்சாலியுவந்துநல்குங்காணிக்கைமகிழ்வினேற்றே. ௩௬

சீலமார்நெறியினுற்றோர்சென்றடிபணியவாழ்த்திக்
கோலமாநகரினபக்கற்குளிர்தருபொழிலின்மேவ
ஞாலமீதுயர்ந்தசீர்த்திநாட்டுங்கெசசலப்பபூமன்
சாலும்பல்லியங்களோங்கத்தளத்துடன்வந்துகணடே. ௩௭

கண்டகமகிழ்ந்துபோற்றிக்கனிவுடன்கோவின்மேவித்
தொண்டருமற்றெவர்க்குமிக்கசுவைதகிகரமுதுநல்கிக்
கொண்டனோர்கரத்தனுங்கோர்நகரமுங்கொடுத்துப்பின்ன
ரெண்டருபொருள்கள்யாவுமீந்தனனென்பமாதோ. ௩௮

மனமிகுமகிழ்வினேற்றமன்னுமெற்றுளோர்க்கு
நனியுவந்தாசிகூறிநன்னலக்கிளைஞர்நாளும்
புனைநலமாகமேவுநகரங்கடோறும்போந்தாங்
கனைவருமகிழ்ந்துநல்குங்காணிக்கையன்பினேற்றே. ௩௯

செங்நெனன்னகரிசபாங்கர்சோலுங்கொடையாளமிக்க
மன்னர்மன்னவனெட்டப்பபூபதிவந்துபோற்றி
நன்னலமிகுந்தகோவினண்ணிப்பின்வந்தோர்க்கெல்லா
மன்னமுமீந்துவேண்டும்பொருள்களுமனபாலீந்தான். ௪௰

சுந்தரர்மகிழ்வினேற்றந்தொன்னகர்தனிலுள்ளோர்
வந்தடிபணியவாழ்த்திவளஞ்செறியவ்வூர்நீங்கிக்
கொந்தலர்சோலைதோறுங்குயிலொடுமயில்கள்கூவ
விந்திரனகரமென்னுமெழின்மெட்டுக்குண்டினபாங்கர். ௪௧

பங்கரினுயர்வான்மிக்கபனிமலர்ச்சோலைதன்னிற்
றீங்கறவத்தோருற்றசேனையொடிருக்குங்காலை
யோங்கியநிதியம்பெற்றவுயரளகேசன்மானத்
தாங்கியசெல்வமுற்றோர்சகலருமிசைந்தொன்றாகி ௪௨

கொடிகுடைவரிசையாவுங்கொண்டெதிர்சென்றுபோற்றித்
திடமிகுநகரினுய்த்துச்சேர்ந்தவர்க்குணவுநல்கி
மடலவிழ்தாரினார்க்குமகிழ்பல்காணிக்கையீந்தாங் ௪௩
கிடங்கள்பலவுநல்கியினிதுறவிருந்தபோழ்தின்.

சுந்தரர்மனதுவந்துதுகளறுதிருநீறள்ளி
வந்தவரெவர்க்குநல்கிமகிழ்ந்துபல்வசனங்கூறி
யந்தநன்னகரைநீங்கியருட்கயிலாயநாதர்
சிந்தையினுவந்துவைகுஞ்சிறந்தபால்வனத்தினெய்தி. ௪௪

அருண்மிகுங்கைலைநாதனைமன்றொடானந்தவல்லி
மருமலர்ப்பதங்கள்போற்றிமகிழ்ந்துதோத்திரங்கள்செய்து
பரிவுடனிருக்குங்காலையப்பதிதனையில்வாழ்வோ
ரருமையிற்சென்றுபோற்றியன்புடனழைத்துவந்தே. ௪௫

வந்தவர்தங்கட்கெல்லாமவரிச்சையின்விருந்துசெய்து
சுந்தரமூர்த்திகாண்டுதுகளில்காணிக்கையீந்தார்
சிந்தையின்மகிழ்வாலேற்றத்திருநகருறைவோர்க்கெல்லா
மந்திரமுறையினவெண்ணீறருளுடன்வழங்கிப்பின்னர். ௪௬

அவ்வளநகரின்பாங்கரணிகிளர்நகர்கடோறுஞ்
செவ்விதினுற்றங்குற்றோர்சிறப்பவளர்க்கவேண்டி
யொவ்வியதவசம்யாவுமுவந்துநன்காகவாங்காங்
கெவ்வமில்களஞ்சியங்களிசைத்தநிறைவுறச்செய்தே. ௪௭

நால்வருணத்துளோருநவிலரும்பொருள்களீந்து
சாலவும்வணங்கியேத்தத்தகவுயர்சுந்தரேசர்
கோலமுன்னெயிற்றிற்கொண்டகுவலயம்வலஞ்செய்தின்ப
மேலதாயுவந்துகூவனகரிடைமேவுங்காலை. ௪௮

அந்நகர்தன்னிலுள்ளோரனைவருமெதிர்சென்றேத்த
நென்னிறைபண்டமிக்கநிரைநிரையாகமேவப்
பொன்னொடுமணிகள்யாவும்பொருவருசாலைசேர்த்து
நன்னலத்துடனேயந்நகரிடையிருந்தார்மாதோ. ௪௯

புவிவலஞ்செய்தபடல-முற்றிற்று.

ஆ படலம் ௧௮-க்கு திருவிருத்தம் ௯௩௮.



உ

சிவமயம்.

# மோக்கப்படலம்.

சீர்மிகுசுந்தரேசர்திகழ்மடபதிசெய்தாங்கட்
பேர்மிகுமறையோருண்ணப்பிறங்குசத்திரமுண்டாக்கி
யேர்மிகும்பண்ணையாவுமினிதுறவமைத்துவெற்றித்
தார்மிகுமார்பர்நெஞ்சிற்றனியறமற்றலையென்றுஞானி. க

பற்பலசமயமென்னெப்பகரிருளகற்றுமபானு
தற்பரமானவீசனெனமறைசாற்றுமென்னப்
பற்பலர்க்கையந்தீரப்பகர்ந்துஞானிலத்திற்சைவ
நற்சமயத்தையென்றுநாளுறவிருத்திசெய்தே. உ

சேர்ந்தபல்லுயிர்க்குநாளுந்திகழ்முத்திகாந்தலையக்
கூர்தனதானமனைபாற்கொடுத்தினிதமருநாளி
லார்ந்தசுந்தரர்மேனுனிமருவியகுமரசாமி
தேர்ந்துபன்னூலுநெஞ்சிற்செருக்கடைந்திருப்பதோர்ந்தே. ௩

மைந்தனையழைத்துநீயிம்மடத்தைக்கொள்வதுதகாதா
னிந்தையீதகற்றுயென்னநெறிமறுத்துரைத்தவோடுந்
தந்தையுமுனிந்துநோக்கத்தனையனுவியும்விண்சேரச்
சிந்தையுட்கலங்கியன்னோன்றனைச்சமாதியிற்சேர்த்தாரால். ௪

சுந்தரருளான்மற்றோர்சுதனெனும்பாப்பையாவுந்
தந்தனளிராமலிங்கசாமியுந்தகையாற்பின்னு
மைந்தர்கள்சிலரையன்பின்மகிழ்ந்தினிதிருக்குங்காலை
முந்தயனவிதியாற்பாப்பையாவுயர்மோட்சமுற்றான். ௫

அன்னவனறனக்குவேண்டுஞ்சடங்குகண்முறையினாற்றி
யின்னியற்றனயனசேயர்க்கினியந்தசாத்திரங்களியாவு
மின்னியமந்திரங்கண்மற்றவுமகிழ்விற்சொல்லி
யன்னநற்றானமென்றுமருளுடனியற்றுநாளில். ௬

இந்நிலத்துயர்ந்தோர்க்காருமெழிற்சமாதியினல்லோகந்
தன்னிற்றாமிருத்தற்குஞானித்தகுமுறையரங்கிசைத்து
மன்னியசுதன்சேய்தன்னைமகிழ்வுடன்றழுவியார்க்கு
நன்னலவசனந்தோடுமாசிகணவிறல்செப்தே. ௭

அன்னதானமவனியுளோர்க்கெலா
மின்னறீரவினிமையினல்கிமெய்
துன்னுநெஞ்சந்துறவுபொருந்தியே
மன்னர்யாரும்வணங்கிடவாழுநாள். கரு

வேறு.

தமதிளைமலர்த்தாணெருநிற்பரித்தருடம்பியான
குமரசாமியின்வலத்தார்சுடரும்பொருள்களேடித்
தமரர்கள்வாழுந்தெய்வாலயகபுரத்திற்சார்ந்தாங்
கிமயநேருயர்சமிரிக்கமெழின்மனையிசைத்துப்பின்னும் கசா

பண்ணைகள்பலவுஞ்சேர்த்துப்பாண்டில்களொருவோடாக்க
வொண்ணிலாதனவாங்கொப்பவிரயத்துத்தங்கிளைஞருள்ளார்
நண்ணுறப்புரிந்துபின்னுநாடொறுமறத்தையோம்பி
மண்ணுலகனைத்துஞ்சீர்த்திவளர்வுறவாகுறூரால் கஎ

செகமதிற்றிருமிராமலிங்கதேசிகர்பினன்பா
லகமதிலுவந்துசீர்சேரருணையிலன்னதானப்
புகழ்பெறுமடமொன்றாக்கிப்பொருவறவனமெஞ்ஞான்று
நிகழ்வதாயியற்றிமிக்கநெறியுறவாழுநாளில் கஅ

வேறு.

தரணிதன்னிலைவலஞ்செய்துதக்கவர்
பரவுகின்றபலநகரங்களின்
மருவியாங்கவரன்பின்வழங்கிய
பொருவில்காணிக்கைப்பொன்மகிழ்ந்தேற்றரோ ககூ

மன்னர்மற்றோர்மகிழ்வின்வழங்கிய
வுன்னரும்பொருளேற்றுண்மகிழ்ச்சியா
லன்னதானமெய்ந்நான்றிலுமன்பினிற்
றுன்றுறுஞ்சேதுவிலுற்றுநீராடியே. உ0

தேவர்தேவன்றன்சேவடிபோற்றிமீண்
டாவலாகவருணிறைசேதுவின
காவலன்னுறைகார்த்தவழிஞ்சிசூழ்
தாவின்மாநகர்சார்ந்தபொழுதினே உக

அந்நகர்க்கிறைபண்புடனசேனையோ
டின்னறீரவெதிர்சென்றுகாண்டலுந்
துன்றுமன்பிற்றுலங்குஞ்சனத்துடன்
மின்னவிர்க்கொளரண்மனைமேவியே. உஉ

ஆரசிருற்றருமாசனம்பீதுற
வரிசையிற்பலகோடியர்சந்தவன்
விரைமலர்ச்சரண்போற்றவிளங்கிய
திருவுளத்திலம் மகிழ்ச்சிசிறந்தரோ. உ௩

மாலூரக்கனிக்குண்டிகையின்வருஞ்
சாலுமாநதரெவர்க்குந்தகுமுறை
சீலமானதிருவெலவணீறீவதை
ஞாலமன்கண்டிநனெருமகிழ்ந்தரோ. உ௪

வேறு.

ஆனையவாகியபூதியின்குடிக்கைகையரசுவந்துறநோக்கி
நனிநிறைந்துறுஞ்செயலினையுணர்ந்திடைநம்பரன்செயலென்னுப்
புனைமலர்ப்பதம்போற்றிவந்தவர்க்கெலாம்போகமிளிசீந்து
கனிவிற்பற்பலபொருள்களுங்கொடுத்திடக்கருத்தினின்மகிழ்ந்தேற்றே

சேதுகாவலன்றனக்குவந்தாசியுஞ்செய்துகுண்டிகைமீதிம்
பூதலத்தினிற்கண்டவரெவர்களுந்போற்றுதல்செயவாழ்த்திக்
காதலோடுதம்பதியினிலெய்திவிக்காசினிபவர்க்கெல்லாம்
போதுறும்படிமுனர்புரியறத்தினுமும்மடிபுரிந்தாரால். உ௬

கார்க்குவந்திசைகாட்டியசரதத்தினர்களிப்புடனொருநாளிற்
சீர்த்ததம்பிரானருளிபசுபர்களிற்றிரழ்வுறுகலேதாங்க
கூர்த்தநன்மதியுடைப்பழனிக்குமாரசாமியைக்குணத்தன்பாற்
பார்த்துமந்திரமுறைகண்மற்றுள்ளவும்படிவுறவுறச்செய்தே. உ௭

கலிநாலாயிரத்துத்தொள்ளாயிரத்தினமேற்கழனைமபத்தெட்டாகும்
பொலிவுறுநளவருடந்தைமதியொளபான்புடமெய்திசேய்நாளி
லிலகுந்தேவருமுனிவரும்புகழ்நதிடயாவரும்பணிந்தேத்த
வலகிலாச்சுகமருள்சமாதியினிடையடங்கினாருண்மிக்கோர். உ௮

ஆனையவாறுணர்ந்தேபழனிக்குமார்சாமியன்புடனுங்கண
முனைமுறைப்படிச்சடங்குகள்யாவையுமுடித்துப்பினனுயர்கோவிற்
வினையகற்றினோர்தமக்கமைத்தென்றுநால்விளம்புபூசனையாற்றி
யினியவோதனதானமுஞ்ஞான்றினுமினிதுறமகிழ்ந்திந்தே. உ௯

பன்னருந்திறற்படையுடையசுராதம்பதியையவீட்டியவேலோன
றன்னுநற்றிருச்செந்திலம்பதியினிடைத்தூயநனமடஞ்செய்தாங்
கன்னதானமெஞ்ஞான்றினுநிகழ்வுறவருள்புரிந்தன்பாக
விக்கிலத்தினிற்புகழ்பரந்துலவநலமின்பமதுடன்வைகி. ௩௰

முன்னுளோர்புரிமுறையினினகரங்கண்முழுவதுமினிதெய்தி
மன்னர்மற் றுளோர்யாவரும்மகிழ்வுடன்வழங்கியபொருளாலுந்
துன்னும்பண்ணை நன்னிலங்களின்விளைவிற் றுலங்கியபொருளாலு
மன்னதானமேமுதலவெண்ணான்கறமருளியாங்கமர்நாளில். ௩௧

மனதுவந் துநற் றுவாதசாந்தந் தவமறாவி நான்முறையாகக்
கனிவிற்சொக்கலிங்கத்துடனேகயற்கண்ணிபொற்பதம்போற்றி
யினிதினேரிடத்திருந்தவனுமறவரெவர்க்குமோதனநல்கிப்
புனிதவாசகங்கேட்டுவந்தவர்க்கெலாமேபோனகமினிதீந்தார் ௩௨

இனையதன்மையையுணர்கலெக்கட்டருமெழிற்றுரைத்தனக்கார
ரனைவரும்பரவநகர்மாந்தர்கள்யாவருமவணைந்த
வினையின்மாதவர்திருமுகநோக்கிநீர்விருந்திவணெல்லோர்க்கு
நனியருந்துதற்கருளுதிரென வுயர்கழுத்தர்கணவிற்காலை. ௩௩

ஆதிசுந்தரர்தமைநினைந்துயாவெணணீறன்னர் தின்மிசைதூவிக்
காதலாயவணவந்தவர்தமக்கெலாங்களிப்புறவனநல்கி
மீதவோதனந்தனையுணப்பலரினும்வேண்டுமென்றிடவீது
நாதனார்செயலெனத்துணைத்தனத்தினர்நனிமனமகிழ்வெய்தி. ௩௪

ஆயபற்பலபணிதிகளாடைகளம்பொனுமிகநல்கி
மேயமேலவரகல்வுறவவ்விடைமேவினோர்க்கருணல்கித்
தூயதம்படைசூழ்வுறப்பல்லியந்துவைப்பட்டவங்கர்நீங்கி
மாயைநீத்தவாகூடவமாநகரிடைமகிழ்வினைவைகினர்மாதோ. ௩௫

வைகியவ்வயின்வருபவர்தமக்கெலாமகிழ்வினோதனநல்கித்
துய்யசீர்த்தியெந்நாட்டினும்பரவச்சுகமுடன்வாழ்நாளின்
மெய்கொள்சுப்பையசாமியையழைத்துநால்விதிமுறைகளுங்கூறி
வெய்யமாயையினபற்றறவீசனைவிரும்பித்தம்மகஞ்சேர்த்தே. ௩௬

வேறு.

சொல்லுங்கலிநாலாயிரத்துத்தொள்ளாயிரத்தேழ்பத்தாண்டிற்
செல்லும்பிரசொற்பதிவருடந்திகழாவணிமூவேழ்திகதி
வல்லசெவ்வாய்க்கிழமையன்றுவரங்கொள்பழனிக்குமார்சாமி
யல்லலகல்சமாதியினிலடைந்தாரரனருட்கணியாயே. ௩௭

தந்தையடையச்சுப்பையநம்சாமிமுறைகடவிராமற்
சிந்தைகளிப்பாற்சடங்கனைத்துஞ்செய்துமுடித்துமுன்முறையா
லிந்தநிலத்தினெவ்வயினுமெய்தியடைந்தோர்க்கருளீந்து
முந்தபுரிந்தோர்தம்மினுமும்மடங்கோதனதானம்புரிந்து. ௩௮

தேவர்க்கிறைவன் பயந்தசெழுங்கொடியைமணந்துதேவரெலா
மாவலுடனேபோற்றிசெயவாறுனனத்தோன்மகிழ்ந்தமருந்
காவில்பரங்குன்றத்திலன்னதானமடமொன்றுண்டாக்கி
மேவுமவர்கட்கெப்போதும்விரும்பியனநல்கிடவுய்த்தே. ௩௯

ஆதியுயர்சுந்தரமூர்த்திக்கன்பாற்பூசைநடத்தி
நீதியுடனேமற்றவர்க்குநெறியிற்பூசைமுறையாற்றிக்
காதலுடனெண்ணுன்கறமுங்கனிவாறபுரிந்துகளிபெய்தி
போதுசுந்தரமௌனகுருசாமிக்கனைத்துமுறைசெய்தே. ௪௰

வேறு.

சீர்சிறந்தகலிநாலாயிரத்தினமேலாய்ச்செடபுந்தொள்ளாயிரத்தெ
ண்பத்தெட்டதாக,வார்சருவசித்துவருடத்திற்பாலுவருட்டுலாங்கனிவி
ருபத்திரண்டாந்தேதி, சேர்செவ்வாய்க்கிழமையிற் சுப்பையசாமிசெக
மாயைதீர்ந்தரன்செம்பதத்தையுன்னித், தீர்வறுநற்சுகமருள்சமாதிதன்
னிற் சேர்ந்தனராற்றேவர்மலர்மாரிபெய்ய. ௪௧

வேறு

அத்தரடங்கமவுனகுருசாமியருளாலாமுறையே
சித்தமகிழ்வாலியற்றியென்றுந்திகழ்பூவரசர்போற்றிசெய
முத்தராஞ்சுந்தரமூர்த்திமுருகார்மலர்த்தாணெஞ்சில்வைத்து
நத்திவருவோர்தமக்கெல்லாநனிஞானவாங்கமுதீந்தே. ௪௨

முன்னோர்புரிந்தமுறைவழியேமுநீராடையுலகனைத்துந்
தந்நேரில்லார்சென்றெவருந்தருமபல்பொருளுமேற்றுநகர்க்
கெந்நேரத்திலெண்ணிலர்களெய்தினுலுமினிதுறநல்
லன்னமொடைமுதற்பலவுமருளினுடனுங்கருள்செய்தே. ௪௩

அன்பாலறத்தையோம்பித்திருவண்ணாமலையிலருளாரு
மின்பாலமரவமர்ந்தருணகிரிவேணியரனசன்னிதிப்பாங்க
ரின்பாலடைந்தோர்க்கிருக்கையுமாயிடர்செய்பசிநோய்மாற்றுவதற்
கின்மாலமுதுமருளமனத்தருளான்மடமொன்றியற்றியே. ௪௪

அறியாமையினற்றமைமதிக்காதவரைநெறியாலடர்த்துமனு
முறையாலரசுபுரியரசர்முழுதுநட்புமேலோங்கிப்
பிறியாதுறையக்கலைமாதுபிறங்குஞ்சென்னிகுளநகரி
லுறைசுந்தரசாமியையாங்கட்குபசாரத்தோடழைத்துவந்தே. ௪௫

அனையதிருச்சுந்தரசாமியருள்செய்முறையின்யாவர்களு
மினியதொழில்களியற்றுமெனவெழிற்சுந்தரரும்வியப்பெய்தி

முனையுள்ளவர்கள் புரியறத்துக்கதிகமுன்றுபங்குறவல்
லனதானங்கண்முதலவெண்ணுன்கறமுமியற்றியமர்ந்தனரால். ௬௬

மன்னுங்கலியேழின்றினயயாயிரமென்றுனாநந்தனவருடந்
துன்னுங்கதிரோன்கோலிருபான்மூன்றுந்திகதிகூர்நாளிற்
பொன்னைநிகர்க்குமெளனகுருசாமிபுவிமாயையைநீத்து
மினனுாரன்றுடனோடிமிகுஞ்சமாதிமேவினரால். ௬௭

அடங்குமவுனகுருசாமிக்கன்பால்வாலசுந்தரராற்
சடங்குபலவுஞ்செய்வித்துத்தகுநன்முறையுஞ்சாற்றிமிகு
திடங்கொண்மனச்சுந்தரசாமிசென்னிகுளத்திற்சேர்ந்துதம
திடங்கொண்மடத்தினைதானமென்றும்புரிந்தாங்கினிதுற்றுர். ௬௮

மோக்கப்படலம் - முற்றிற்று.

---

ஆக படலம் ௧௪ க்கு - திருவிருத்தம் - ௯௮௯.

வாலசுந்தரர்

# புண்ணியபரிபாலனப்படலம்.

அகமகிழ்ந்தாளுமத்தன்சமாதியிலடைந்லோடுந்
செகமெலாம்புகழும்வாலசுந்தராதியக்கங்கண்டு
மிகுபுகழ்படைத்ததங்கணமரபுளோர்விருப்பிற்கூடி
முகமன்களபலவுங்கூறிமுகமலரொளிரச்செய்தே.

யாவருங்கூடியோசித்தெழிலுறம்வளர்த்தர்கவேற்ற
தாவருங்குணத்தான்மிக்கோரெவரெனசசாற்றுங்காலேச்
சேவுயர்துவசனன்பன்சென்னமரெட்டிபட்டி
மேவருணுசலப்பேர்வளன்மிக்கானென்றார்சில்லோர்.

சகலருமிசைந்தேயன்னோன்றன்னையாங்கழைத்துநீயே
யிகழ்வறுங்குமாரசாமியெழிற்றுரைசாமியன்பிற்
றிகழுஞ்சுப்பையசாமியுடன்சிறப்புறமித்தன்மஞ்
செகமெலாம்புகழுற்றேங்கடத்துதல்சீர்த்ததென்று.

அனையவரிசைந்துவாலசுந்தரரருளினுலே
முனையுளோர்புரியரத்தின்மும்மடியதிகமாகப்

புனைநகர்தோறுஞ்சென்றுங்கட்பொருந்துறுபொருள்களாலும்
தனைநிகரில்லாவன்னதானநாடோறுஞ்செய்வாரால். ௪

மன்பதைபுரக்குமாற்றால்வாலசுந்தரருமிக்க
வன்புடனுயர்பல்லக்கினமர்ந்துபல்லியங்களோங்கத்
தன்கிளைச்சுற்றமுற்றோர்சகலருஞ்சூழ்ந்துசெல்ல
மின்கிளரொளியிற்பற்பல்விருதுகளுடனெழுந்தே. ௫

மனுநெறிமுறையினிந்தவையகந்தனையாளுங்
கனைகழலரசர்மற்றோரியாவருங்கண்டுபோற்றப்
பனிவளர்மதியமென்னப்பண்புயர்நகர்கடோறும்
புனிதமதாகச்சென்றுபுனைவெண்ணீறினிதினல்கி. ௬

அணியுடனுங்காங்குற்றோரளித்தநற்பொருள்களெல்லா
மிணையிலாமகிழ்வினோடுங்கிசைந்தபண்டிகண்மீதேற்றி
மணிமிகக்கணகணென்னவொலிப்பமாக்கங்கடோறுந்
தணிவிலாக்களஞ்சியங்கணிறைவுறச்சாருமென்றும். ௭

வடக்குவேங்கடங்குணக்கின்வாரிதென்பொதிகைபின்னுங்
குடக்குயர்கடலுமென்னக்கூறியபரப்பினெங்குந்
திடத்துடன்பிலுநதஞ்சீர்த்திசெலுமிடந்தோறுநின்றே
யடக்கரும்பொருட்காணிக்கைபாகவாங்குறுவதாமால். ௮

வாலசுந்தரருஞ்சிந்தைமகிழ்வுடனனைத்துமேவிச்
சீலஞ்சேர்குடிகட்கென்றுஞ்சிறப்புறவாசிகூறிக்
கோலமார்நகரினுற்றுக்கொண்டனேர்முழவதிர்த்து
மேலவர்முறையினாற்றும்விதிப்படியறங்களசெய்தே. ௯

ஆதிசுந்தரமூர்த்திக்குள்ளன்பின்முக்காலபூசை
நீதியினியற்றிமுன்னோரியற்றியநெறியினூறே
காதலாயச்சதுரவோங்கற்கினிதுடன்கடகத்திங்கட்
போதுவோர்தமக்குவேண்டும்பொருள்களுமினிதினீந்தே. ௰

மீண்டவர்வரும்போதன்புமீதுறவிருக்கச்செய்து
தாண்டவம்புரியுமீசன்றன்னடியவர்மற்றோர்க்கும்
வேண்டியவாறினெண்ணெய்த்தானங்கள்விருப்பிற்செய்து
காண்டகமேலோர்சிந்தைகருதியவுணவுமீந்தே. ௧௧

சுந்தரமூர்த்திசெய்யதுணைமலர்ப்பதங்களன்பாற்
சிந்தையிற்கருதிநாளுஞ்செல்வமேன்மேலுமோங்க

வந்தவரெவர்க்குஞ்சிந்தைமகிழ்வுறவசனால்கி
யிந்தமாநிலத்திலென்றுமிசையுறவாழ்வதாமால். ௧௨

பல்வளஞ்செழிக்குமெட்டிக்குண்டெனும்பதியிலென்றுஞ்
செல்வமென்மேலுமோங்கச்சிறக்குஞ்சுப்பையபூம
னல்வளமனையினுற்றநாவலர்தமைக்காத்தாற்போற்
செல்பவர்வறுமைதீரத்தினமனமுதவுவாரே. ௧௩

மங்கைபங்கமர்வோன்மேனாளருளியவரத்தினாலே
தங்களின்மரபின்வந்தோர்தமக்கெலாம்புகழுண்டாகத்
திங்கண்மும்மாரிபெய்யச்செகமெலாஞ்செழிப்புற்றோங்கத்
துங்கமிக்கன்னதானநாடொறுந்துலங்குமாதோ. ௧௪

மாதவர்முதலாயிந்தமாநிலத்துயர்ந்தோர்க்கெல்லாம்
போதுறவன்னநல்கும்புண்ணியசரிதந்தன்னை
நீதிசேர்முனிவராலுநிகழ்த்துதற்கரிதாமந்தை
யோதினேனெனதுபுன்மையுயர்ந்தவர்தெரிக்குமாறே. ௧௫

சுருதிகள்வாழியீசன்றுணைமலரடிகள்வாழி
யரியயனமரர்வாழியருண்மிகுமுனிவர்வாழி
பொருவிலாச்சுந்தரேசன்பொற்பதம்வாழியன்னோர்
மரபுளோரெவரும்வாழிவழங்கனதானம்வாழி. ௧௬

செந்நெலின்பணைகள்சூழ்ந்தி சூழ்கூவளகரம்வாழி
மன்னவர்வாழியிந்தமாநிலமுழுதும்வாழி
யின்னலில்லானநூலையினிதுறப்பகர்வோர்கேட்போர்
நன்னலமிகுந்தேயெந்நாளினும்வாழ்கமாதோ. ௰௭

வாலசுந்தரர்புண்ணியபரிபாலனப்படல-முற்றிற்று.

ஆ படலம் ௨௰ - க்கு திருவிருத்தம் - ௲௩.

ஸ்ரீ மத் - கூ வ ல ப் பு ர ம்

அன்னதானமகத்துவபுராண முற்றிற்று.

சுந்தரமூர்த்திசுவாமிகளது

திருவடிகள் வாழ்க.

---